உ

வேலூர்

# ஸ்ரீ தோபா சுவாமிகள் அற்புத வரலாறு

எழுதியது

தவத்திரு. சோம. கோபால சுவாமிகள்




வெளியிட்டது

ஸ்ரீமத் மகா. நாராயண சுவாமிகள்
வேலூர்

நான்காம் பதிப்பு
1981

அடக்க விலை } ரூ. 2-25

உ
சிவமயம்

# ஸ்ரீ தோபா சுவாமிகள் அற்புத வரலாறு

இது
காரைக்குடி கோவிலூர் மடம்
8-ஆவது குரு மகா சந்நிதானம்
ஸ்ரீலஸ்ரீ சோமசுந்தர ஞான தேசிக சுவாமிகளின்
சீடரான
ஸ்ரீ சோம-கோபால சுவாமி
அவர்களால் எழுதப்பட்டு,

வேலூர் ஸ்ரீ தோபா சுவாமிகள் மடம்
ஏழாவது மடாதிபதி
ஸ்ரீமத் மகா-நாராயண சுவாமி அவர்களால்
வேலூர் ஸ்ரீ இராமச்சந்திரா பிரஸில் அச்சிடப்பட்டு,

ஸ்ரீ தோபா சுவாமிகளின்
131-ஆவது ஆண்டு
குரு பூசையின் முதல் நாள் விழா
(4-4-1981) அன்று வெளியிடப்பட்டது.

நான்காம் பதிப்பு

காபி ரைட்] 1981 [அடக்க விலை ரு. 2-25

சிவமயம்

# பாயிரம்

அருளே திரு உருவாய் இலகும் ஆண்டவன் படைத்த உயிர்கள் அனைத்துள்ளும் மனித சரீரம் தாங்கிய சீவனே உத்தமன். இச் சீவனுக்கே; தன்னை அனந்தங் கோடி ஜன்மங்களை எடுத்துக் கொண்டு பிறவித் துன்பத் தழுந்திக் கொள்ளவும்; அல்லது, இப் பிறப்பிலேயே தனது தீவிர தர முயற்சியினால் பிறவா நிலையை எய்திப் பேரானந் தப் பெருவாழ்வில் நிலைத்துக் கொள்ளவும் ஆகிய ஆற்றல் அமைந்துள்ளது.

இதனைத் தெரிந்து வினையாடல் புரியாச் சிறு மதியாளர் பலர், இன்பத்தை அடைய விரும்பி துன்பத்துக்குரிய இராகத் துவேஷாதி குணங் களையே மேற்கொண்டு செயலாற்றுகின்றனர். இதனால், உலகில் தருமம் அழிந்து அதருமம் மேலோங்குகிறது. இந் நிலையைப் போக்க எல்லாம் வல்ல இறைவன் அவ்வப்பொழுது தமது பிரதி நிதிகளாக ஞானிகள், சித்தர்கள் முதலான பெரி யோர்களை அனுப்பி அவர்கள் மூலமாகத் துட்ட நிக்கிரக சிட்ட பரிபாலனம் செய்கின்றார்.

அப்படிப் பட்ட பெரியோர்களில், இத் தொண்டை நாட்டின் கண் சென்னையிலும், வேலூ ரிலும் வாழ்ந்து வியக்கத் தக்க ஞான சித்துக்களை அனேக விதமாக வெளிப்படுத்தி, அதருமத்தை அழித்து தருமத்தை நிலைநாட்டின மகான், ஸ்ரீ தோபா சுவாமிகள் ஆவார்கள். இவர்களது அற் புத வரலாற்றை விளக்கும் நூலாக இதனை வெளி யாக்கப்பட்டுள்ளது.

சுமார் நூறு ஆண்டுகளுக்கு முன்னர் இம் மகானின் வரலாற்றுக் குறிப்புக்களை நேரில் கண்டவர்களிடம் கேட்டுச் சேகரம் செய்துகொண்டு "தோபா சுவாமிகள் புராணச் செய்யுள்" என்னும் பெயரால், முத்தமிழ் இரத்ஞகரம் பானுகவி அவர்கள், பாயிரம் உள்பட 156 செய்யுட்களைக்கொண்ட ஒரு தொகை நூலாக்கினுர்கள். பிற்காலத்தில் இதனையே வகைப்படுத்தி விரிவாக ஸ்ரீலஸ்ரீ காசிவாசி சிவானந்த யதிந்திர சுவாமிகள் (வேதமொழி பெயர்ப்பாசிரியர்) அவர்களால் வசன நூல் வடிவமாக எழுதப்பெற்று இம் மடத்தின் நான்காவது மடாதிபதியாக விளங்கிய ஸ்ரீ சுப்பிரமணிய சுவாமி அவர்களால் 1937-ஆம் ஆண்டு "ஸ்ரீ தோபா சுவாமிகள் புராண வசனம்" என்னும் நூலாக வெளியிடப்பட்டது

இதன் பிறகு, சிதம்பரம மௌன சுவாமிகள் மடாலயத் தலைவர் ஸ்ரீ சபாபதி சுவாமி அவர்களால் சுருக்கமாக எழுதப்பெற்று "ஸ்ரீ தோபா சுவாமிகளின் சரித்திரச் சுருக்கம்" என்னும் நூலாக இம்மடத்தின் 6-வது மடாதிபதியாகிய ஸ்ரீ வடிவேல் சுவாமி அவர்களால் 29-3-1968-ஆம் தேதியில் ஸ்ரீ தோபா சுவாமிகளின் 119-வது ஆண்டு குருபூசையின் போது இரண்டாவதாக வெளியிடப்பட்டது.

அதன் பின்னர், வேலூர் அன்பர் ஸ்ரீ மு. பெருமாள் அவர்களால் எழுதப்பெற்று, இம் மடத்தின் 7-வது மடாதிபதி தவத்திரு மகா-நாராயண சுவாமி அவர்களால், ஷெ திரு மடாலய புனருத்தாரண அட்டபந்தன மகாகும்பாபிஷேகமும், 127வது ஆண்டு குரு பூசையும் ஆகியவைகளின் நினைவாக (21—3—1977-ல்) "தோபா சுவாமிகள் வரலாறு" என்னும் நூல் மூன்றாவது முறையாக வெளியிடப்பட்டது.

இப்படி மூன்று முறை வெளியிடப்பட்டுள்ள மகான் ஸ்ரீ தோபா சுவாமி சரித்திர புத்தகங்கள் கைவசம் இன்மையாலும், பக்தர்களின் விருப்பத் திணங்கவும் நான்காவது முறையாக வெளியிட இராமநாதபுரம் மாவட்டம். காரைக்குடி, கோவிலூர் மடம் 8-வது குரு மகா சந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ சோம சுந்தர ஞான தேசிக சுவாமிகளின் சீடர்களில் ஒரு வஞன அடியேனை எழுதுமாறு இப்போதைய மடாலயத் தலைவர் ஸ்ரீ மகா-நாராயண சுவாமி அவர்கள் ஆணையிட்டார்கள். அடியேனும் முன்னைப் பதிப்புக்களை ஆதாரமாகக் கொண்டு சிற்சில திருத்தங்களுடன் பல புதிய விளக்கங் களைக் கொடுத்து முடிந்த அளவில் எழுதியுள் ளேன். பிழைகள் உளதேல் பொருத்தருள் புரி வீராக.

"ஸ்ரீ தோபா சுவாமிகள் அற்புத வரலாறு" என்னும் இந் நூலுக்கு அணிந்துரை, சாற்றுக்கவி கள், சிறப்புப் பாயிரம் ஆகியவைகளை அன்புடன் நல்கிய, அருள்மொழியரசு திருமுருக ஸ்ரீ கிருபா னந்தவாரியார் சுவாமிகள் அவர்கட்கும், அருட் திரு தவத்திரு. சாதுராம் சுவாமி அவர்கட்கும், தவத்திரு. மகா-கோவிந்த சுவாமி அவர்கட்கும், மற்றும்; பிழை திருத்தங்கள் செய்வதற்குப் பெரி தும் உதவியாக இருந்த வேலூர் சைதாப்பேட்டை ஷராப் திரு. V. சொக்கநாத நாட்டார் அவர்கட்கும் இந் நூலை நல்ல முறையில் அச்சிட்டு உதவிய வேலூர் ஸ்ரீ ராமச்சந்திரா பிரஸ் ஸ்தாபகரும் தரும கைங்கரியங்களில் ஈடுபட்டுள்ளவருமான, உயர் திரு. D. நடேச முதலியார் குமாரர்கள் N. K. பாணி அன் பிரதர்ஸ், திரு. K. தெய்வசிகாமணி முதலி யார் அவர்கட்கும், ஸ்ரீ தோபா சுவாமிகளின் பேரருள் முழுவதும் கிட்டுவதாகட்டும்.

இந் நூலை ஒவ்வொரு பக்தரும் வாங்கிப் பல முறை படிக்க வேண்டும். தம் குடும்பத்தில் அனைவரையும் படிக்கச் செய்யவோ; படிப்பதைக் கேட்கச் செய்யவோ ஆக்குவதுடன், பூஜை அறையில் வைத்துப் பூசிக்கவும் வேண்டும். இவ்வாறு நாடோறும் விடாமல் இயன்ற அளவில் செய்துவரின், இதுவே ஒரு தவமாகி நமது ஸ்ரீ தோபா சுவாமிகளின் அனுக்கிரகம் பெற்றவர்களாய் இஷ்ட சித்திகளைப் பெறுவர் என்பது திண்ணம். பெறவே, குடும்பக் கஷ்டங்களிலிருந்து விடுபட்டு இன்பமுற்றவர்களாய் மறுமைக்குரிய புண்ணிய காரியங்களான யக்ஞம், தவம், தானம், விரதம், சீலம், உபாசனை ஆகியவைகளில் முடிந்தவரை ஈடுபாடுடையவர்கள் ஆவார்கள். ஈடுபாடடையவே நிஷ்காம புண்ணிய கரும, உபாசனைகளில் விருப்புடையவர்களாய்; படிக்கிரமமாகச் செயல்படுவார்கள். செயல்படவே. ஞானம் பெறுவதில் ஆர்வம் உடையவர்களாய்; ஆத்ம, அனாத்ம விசாரணை செய்பவர்களாகி ஞானம் பெறுவர். இதன் பலனான சர்வதுக்க நிவிர்த்தி பரமானந்தப் பிராப்தி ரூபமான முத்தியை அடைந்து பேரானந்தப் பெருவாழ்வில் நிலைபெறுவர். இந்தக் கிரம முத்தியான முக்கியப் பயனைப் பெற்றுய்ய நமது ஸ்ரீ தோபா சுவாமிகளின் இன்னருள் அனைவருக்கும் கிடைப்பதாகட்டும் என எல்லாம் வல்ல மாயா விசிட்ட சேதனமான காரணப் பிரம்மத்தை (ஈசுவரனை)ப் பிரார்த்திக்கிறேன்.

ஸ்ரீ தோபா சுவாமிகள்
மடாலயம்
சைதாப்பேட்டை
வேலூர்-12 வ. ஆ மா

வேணும்
ஸ்ரீ சற்குரு நாதன் துணை
சோம-கோபால சுவாமி
16—3—1981

உ

முருகா

அருள்மொழியரசு ஸ்ரீலஸ்ரீ

கிருபானந்தவாரியார் சுவாமிகள்

அன்புடன் அருளிச் செய்த



## அணிந்துரை

அண்டர்கள் போற்றும் தொண்டை நன்னாட்டில் பாலாற்றங் கரையில் விளங்கும் வேலைமா நகரில் சமாதி கொண்டு எழுந்தருளிய மகான் தோபா சுவாமிகள் பெரிய சித்தர். அண்மையில் வாழ்ந்த உண்மைத் துறவி. இவர், பலப் பல

அற்புதங்களைச் செய்திருக்கின்றார். இவருடைய வரலாறு தேனினும் இனிமையாகத் தித்திக்கின்றது. இதனைப் படித்தோர் பரவசம் அடைவர். ஒப்பாரும் மிக்காரும் இல்லாத சுவாமிகள்; இப்பாரில் திருமேனி கொண்டு அடியவர்களை உய்வித்தருளினார். தோபா சுவாமிகளை நினைத்தவரும், வழிபட்டவர்களும், அல்லல் அகன்று நல்லன எல்லாம் பெறுவார்கள்.

இந்த வரலாற்றை சீலத்திரு சோம-கோபால சுவாமிகள் மிக்க அழகாக எழுதியுள்ளார்.

தோபா சுவாமி மடாதிபதியாய் புண்ணிய மகான் திருப்பெருந் திரு மகா-நாராயணசாமி சுவாமிகள் இனிது அச்சிட்டு வெளியிட்டு உதவினார். இதனைப் படித்தோர் தோபா சுவாமிகளின் கருணையால் எல்லா நலன்களையும் எளிதிற் பெறுவார்கள்.

நேரிசை வெண்பா

தூயபுகழ் வேலூநகர் தோபா சுவாமிதனை
நேயமுடன் போற்றினோர் நீடுலகில்—நோயகன்று
எல்லா நலன்களும் எய்தியே இன்புறுவர்
பல்லாண்டு வாழ்வர் பணைத்து.

அன்பன்,

கிருபானந்தவாரி

உ

பொங்கி துணை

சென்னை-அருட்கவி-தவத்திரு.

## ஸாதுராம் சுவாமிகள்

அருளிய சாற்றுக் கவி

(அறு சீரடி ஆசிரிய வ்ருத்தம்)

திருவுடைய திருச்சிராப் பள்ளிஎனும்
த்ரிசிரபுரத் தினிற்ஜெ னித்து
மருவுடைய ராயவே லூர்தன்னில்
பாலாற்றின் வளர்க ரைக்கண்
உருவுடைய சைதைநகர் உயர்வுறவே
ஸமாதிகொளும் யோகி ஞானி
கருவுடைய பிறப்பறுத்துக் கடவுள் அடி
சேரும்வழி காட்டும் மோனி. 1.

'தோடுடைய' பாடென்று திருஞான
ஸம்பந்தர் தொன்மைப் பாடல்
நீடுடைய திருநெறிய தமிழ்என்னும்
தேவார நிதிவி ளைந்து
பாடுடைய மானிடரைப் பார்த்தஇடம்
எல்லாமும் பாட்டுக் கேட்டுச்
தோடுடைய பேர்தோபா ஸாமிஎனப்
பெற்றிருந்த தூயோன் ஸித்தன். 2.

முதல்எழுத்துத் 'தோடுடைய' எனும் சொல்லில்
'தோ'ஆகும் முதல்'பா டெ'ன்னும்
பதத்தெழுத்துப் 'பா'ஆகும் இவைசேர்ந்து
தோபாவாம் பதமா யிற்(று)இவ்

விதத்தில்அவர் பேர்'தோபா ஸாமி'எனல்
ஆயிற்று விளம்பப் போங்கால்
ஹிதத்தைஉல கினர்க்குபதே சித்தருளும்
ஸித்தர்இவர் போல்இங் காரே?. 3.

தோபாஸா மியைப் பற்றிப் பலர்பலவாம்
சரிதைகளைத் தொகுத்துச் சொன்னார்
ஆபால கோபாலம் படித்தறிய
அவர்சரிதம் அழகாய் ஆக்கிக்
கோபால ஸாமிஎன்பார் உரைநடையில்
இன்றாக்கிக் கொடுத்துள் ளாரால்
பூபாலர் முதல்ஆண்டி வரைப்படித்துப்
பயன்பெற்றுப் புனிதம் ஆவார். 4.

நற்றவர்தம் வரலாற்றை நனிகற்றல்
செவிகேட்டல் நாவாற் சொல்லல்
கற்றறிந்து சிந்தித்தல் கட்டுரைத்தல்
கவிஆக்கல் கல்லா தார்க்கும்
சொற்றறியச் செய்தல்பறை சாற்றலச்சிட்
டுதவிடுதல் தொகுத்தெழுத்தில்
நிற்றலுறத் தொண்டுசெய்தல் எல்லாமும்
நீணிலத்தில் நிகரில் தொண்டே. 5.

அத்தகுதொண் டினில்ஒன்றைத் தோபாஸா
மிக்காற்றும் அரிய செய்கை
வித்தகராம் கோபால ஸாமிஅவர்
செய்துள்ளார் விளக்க மாக
இத்தகைய திருப்பணிக்கே மஹாநாரா
யணசாமி ஏழாம் பட்டத்
தொத்தந்தத் தோபாஸா மிகள்மடத்தில்
மடாதிபதித் தொண்டு செய்வார். 6.

அந்நூலை அச்சிட்டு வெளியாக்கும்
அருந்தொண்டை மேற்கொண் டச்சிட்
டெந்நூலும் இதற்கிணையே இல்லையென
இஹம்புகழ இனிமை செய்தார்
இந்நூலை யாவருமே நன்குபடித்
தின்பமுறல் எய்தல் வேண்டும்
கைந்நூலைக் கற்பதினும் களிப்பிந்தக்
காசினியிற் காண்ப தெங்கே?. 7.

வாழியஇவ் வரலாறு! வாழியதோ
பாஸாமி மஹிமை என்றும்
வாழியிதை வரைந்தவரும் அச்சாக்கி
வெளிவரவே வகைசெய் தோரும்
வாழியவே லூர்ச்சைதைத் தோபாஸா
மிகள மடம்தான் வாழி! அன்பர்!
வாழி!இந்நூல் கற்பவர்கள் கேட்பவர்கள்
வையகமும் வாழி! வாழி!. 8.

— *ஸாது ராம் ஸ்வாமிகள்*
13—6—1980
(மேற்பாடி முகாம் வ, ஆ மா.)

---

உ

சிவமயம்

*பழைய வாணியம்பாடி*

ஸ்ரீ பொன்னம்பல சுவாமிகள் அவர்கள்

*மடாதிபதி-மகா*-கோவிந்தசாமி அவர்கள்

*இயற்றிய*

## சிறப்புப் பாயிரம்

### *நிலை மண்டில ஆசிரியப் பா*

திருவளர் வேலூர் சீர்நக ரதனில்
பெருந்தவத் திருந்த பெரியாரில் பெரியோன்
அட்டமா சித்தி ஆடிய மேலோன்
இட்டமாய் மக்களை ஈன்றதாய் போல
அன்புடன் வேண்டிய அருள்களைப் புரிந்து

பண்புடன் திகம்பர பரமமெய்ப் பொருளாய்ச்
சைதைப் பகுதியில் திருகற் பகம்போல்
கைதவ மகற்றிக் கருணையின் வடிவாய்
இன்றும் அன்றும் என்றும் நிலையாய்
குன்றினி லிட்ட கோதில் தீபமாய்

விளங்கி யெமக்கும் விவேகம் புகட்டி
களங்க மகற்றிக் காத்தே யுதவும்
தோபா சுவாமியின் தூய்புக ழதனை
பாபா திகளறப் பாலித் தியாக்கும்
ஊழாம் வினையை ஓட்டுதோ பாமடம்

ஏழாம் பட்டம் எழில்பெற விளங்கி
ஓமெனும் பொருளாம் உயர்நா ராயண
சாமி யென்னும் தப்பிலா ஞான

வீரத் துறவி விவேக தீபச்
சாரம் உணர்ந்துள் சாந்தம் பெற்ருேன்

மகாதே வகுரு மாணவ ஞகும்
சகாதே வனைப்போல் சதுரன் எனலாம்
அன்னவன் தூண்ட அழகாய் யாவரும்
கண்ணில் ஒற்ற கற்றவர் வியக்க
தோபா சுவாமியின் தூய்சரித் திரத்தைக்

கோபா தியினைக் கொன்றநல் துறவி
சோம சுந்தரக் கோமளக் குருவின்
சேம சீடனுய்த் திகழ்ந்துதொண் டாற்றிக்
கற்றுங் கேட்டுங் கவின்தியா னத்தில்
சற்றுங் குறைவிற் சாதனம் நிறைந்த

உத்தம குணத்தோன் உயரிய பண்போன்
சத்துச் சித்துச் சதானந் தமதாய்ச்
சங்கை யற்ற தனிஞா னமதை
அங்கை நெல்லிபோல் அடைந்த பெரியோன்
கோபால் சுவாமி குறைவில் லாமல்

தாபா திகளைச் சாந்தப் படுத்தும்
அம்ருதம் போல ஆக்கி யளித்தான்
எம்மனோர் கற்ருல் இனிய ஞானமும்
இல்லத் தவர்கள் இனிதே யோதிஞல்
நல்ல பொருளும் நல்ல மக்களும்

சிறந்த கல்வியும் திடகாத் திரமும்
அறத்துப்புண் ணியமும் அகண்ட சுகமும்
நல்லதோ பாவின் நற்கரு ணையிஞல்
எல்லா நலனும் இனிதடை குவரே.

---

உ

சிவமயம்

## ஸ்ரீ பஞ்சமூர்த்திகள் வணக்கம்

சிதம்பரம் ஸ்ரீ மௌன சுவாமிகள்

மடாலயத் தலைவர்

ஸ்ரீமத் சபாபதி சுவாமி அவர்கள்

இயற்றியது

---

இமையவர் பரவுந் திருநிறை வேலூர்
எழுந்தருள் ஐங்கரக் களிற்றை

எமையருள் குகனை அருளுரு அகிலாண்
டேச்வரி யாகும்எம் அனையை

இமிழ்சுடர் மவுலி புனைதரு சலகண்
டேசுர னுமுயர் இறையை

நமைப்பிறப் பொழிக்குங் குருபரன் தோபா
நாண்மல ரடிகளைத் தொழுவாம்.

---

உ

சிவமயம்



இந்தப் படத்தை நன்கொடையாக அளித்தவர்

திரு. தோ. ர. பாபு முதலியார் & சன்ஸ்,

வெல்ல மண்டி, 34/18, காட்பாடி ரோடு, வேலூர். வ. ஆ. மா.

# உள்ளே உள்ளவை



பாகம் 1 — அற்புதங்கள் — பக்கங்கள்

பாகம் 2 பக்கங்கள்



பாகம் 3



---

உ

சிவமயம்

# ஸ்ரீ தோபா சுவாமிகள்

# அற்புத வரலாறு

காப்பு

நல்லசித்தி நன்ஞானம் நன்கெய்தி வேலூரில்
நல்லவன்பர்க் கின்பும் நலமிலா — அல்லவர்க்குத்
தண்டமுஞ் செய்மகான் தோபா சரிதமாக்கக்
கண்டமில்வி நாயகனே காப்பு.

## நூல்

## முதலாவது பாகம்

### நாட்டுச் சிறப்பு

அன்ன வாகனனும் அயன் படைத்த இந்த அவனியில் பாரதம் என வழங்கும் புராதன நாடு இந்திய நாடாகும். இந்நாடு நீர்வளமும் அதற்கேற்ப நில வளமும் மிக்கிருப்பதோடு சர்வதுக்க நிவிர்த்தி பரமானந்தப் பிராப்த்தி ரூபமான முத்தியை அளிக்கும் மெய்ஞ்ஞானம் (ஆத்ம ஞானம்) அடைந்த மகான்கள் தோன்றியுள்ளது மாகும். அதனாலே யன்றோ விஞ்ஞானத்தில் மேம்பட்டிருக்கும் மேலைநாடுகளிலுள்ளார்கள், பலவிதமான போக பாக்கியங்களை அனுபவித்தும், மனச் சாந்தியின்றி பரிதாப கரமான முடிவுகளை அடைகின்றனர்! இப்படிப் பட்டோர்களும் நம் நாட்டு

ஆத்ம ஞானம் எனும் மருந்தை விரும்பி அருந்தி மனச் சாந்தி பெறுகின்றார்களென்றால் நமது நாட்டின் (ஞானிகளின்) பெருமையை (சிறப்பை) அளவிட்டுக் கூற வியலுமோ ?!

இத்தகைய பாரத நாட்டின் தென் பகுதியில் காவிரி முதலான நதிகள் பாய்ந்து வளஞ் செய் நாடு தமிழ்நாடு எனப்படுவதாகும். இத் தமிழகத்தின் வடபால் தொண்டை நாடெனப்படும் நாடு *சான்றோர்கள் மிக்குடையதாகும். இந்நாட்டின் பாலாற்றங்கரையிலே வேலூர் என்னும் மாநகரத்தின் கண்ணே அட்டமா சித்திகளும் தத்துவ ஞானமும் ஒருங்கே பெற்று விளங்கி சுமார் 130 ஆண்டுகளுக்குமுன் தோபா சுவாமிகள் என்னும் மிகப்பெரிய மகான் சமாதி கொண்டு அருள் பாலித்து வருகின்றார்கள்.

## நகரச் சிறப்பு

பூரண திருப்தி, நிறைந்து விட்டது, இனி வேண்டாம், போதும்! போதும்! என்னும் அளவிற்கு ஒருவர்க்கு ஒன்று கொடுக்க வேண்டுமென்றால் அது உணவு ஒன்றேயாகும். அதனால் தான் பாண்டிய நாடு முத்துடைத்து சேர நாடு வேழமுடைத்து, சோழநாடு சோறுடைத்து என்று முந்நாட்டுச் சிறப்புக்களைக் கூறும் ஔவைப்பிராட்டியாரும் சோழ நாட்டிற்கே ஏற்றந் தந்தனர்! அப்படிப்பட்ட சோழநாட்டின் தலை நகரங்களில்,

* இந் நூலின் இரண்டாம் பாகம் நாட்டுச்சிறப்பில் சான்றோர்களின் பெயர்களைக் காணலாம்.

பாகம் ]

ஒன்றான உறையூரும், மகாவிஷ்ணு பள்ளி கொண்டுள்ள ஸ்ரீ ரங்கமும், பஞ்ச பூதங்களில் ஒன்றும் அப்புபூதத் தலமான திருவானைக்காவலும், புகழ் மிக்க மாரியம்மன் உறையும் சமயபுரமும், குணக் கேடுகளைப் போக்கும் குணசீலமும், ஸ்ரீ அருணகிரி யாரால் பாடப்பெற்ற வயலூர் ஸ்ரீ முருகப்பிரான் சேத்திரமும், விராலி மலையும், முதலான சூழப்பெற் றுள்ளதும் மலைக்கோட்டையும், அதின் உச்சியில் பிள்ளையாரும், ஸ்ரீ தாயுமான சுவாமியும் எழுந் தருளி அருள் பாலிப்பதும், காவிரி ஆற்றங்கரையி லுள்ளது மான திரிசிரபுரம் என்னும் மாநகர் ஸ்ரீ தோபா சுவாமிகள் திருவவதாரம் செய்த திருச்சிராப் பள்ளியாகும்.

## தாய் தந்தையர்

இத் திரிசிரபுரத்தில் சுமார் 200 ஆண்டுகளுக்கு முன் சிறப்புமிக்க வேளாளர் குலத்திலே சிவகுரு நாதப்பிள்ளை என்பவர் வாழ்ந்து வந்தார். வேள் = (விரும்பி) உபசரிக்கும் (உயர் குணத்தை) ஆள் = ஆளுந் தன்மையர் ; என்னும் பொருளுடையது வேளாளர் என்னுஞ் சொல் ஆகும. இம் மரபுக் கேற்றபடி, "தாளாற்றித் தந்த பொருளெல்லாந் தக்கார்க்கு வேளாண்மை செய்தற் பொருட்டு" எனத் தெய்வப் புலவர் திருவள்ளுவனாரும் ; "மெய் மையுங் கொடையும் வேளாண்மையாகும்." எனப் பிங்கலந்தை நிகண்டுங் கூறியுள்ளதை மனத்திற் கொண்டு உடல்வலி, மனவூக்கம். அருள். கொடை, அன்பு, சிவபக்தி, சிவனடியார் தொண்டு, கல்வி, கேள்வி, முதலான நற்குண நல்லொழுக்கங்களிற்

சிறந்து விளங்கினர். இவர் தம் மரபிற் பிறந்த சிவகாமி அம்மை யென்னும் மாதை மணந்து காதலிருவர் கருத்தொருமித்து ஆதரவுபட்டு இன் புற்று வாழ்ந்து வந்தார். அவ்வம்மையாரும், "தற்காத்து தற்கொண்டாற்பேணி தகைசான்ற, சொற்காத்துச் சோர்விலாள் பெண்." என்னுந் தமிழ் மறைப்படி இல்லற நெறியில் நின்றனர்.

அக் காலத்தில் நம் நாட்டில் ஆங்கிலேயரின் ஆதிக்கம் வேரூன்றி வளர்ந்து கொண்டிருந்தது. ஆதலால் பெரும் படையைத் திரட்டி வைத்திருந் தனர். அப்படையில் நமது தமிழ் மக்களும் பலர் சேர்ந்தபோது நம்முடைய சிவகுருநாதப் பிள்ளை யுஞ் சேர்ந்து சிறந்தமுறையில் காலாட்படையில் சேவை செய்து வந்தார். அதனுல் வரும் வரு வாயைக் கொண்டு இல்லறத்தை நல்லறமாகச் செய்தார். இவ்வாறு வாழ்ந்து வரும் நாளில் இரண்டு ஆண் மக்களையும் பெண் மகவு ஒன்றை யும் பெற்றனர்.

## ஸ்ரீ தோபா சுவாமிகளின் தோற்றச் சிறப்பு

அதன்பின்னர் சில நாட்களுக்குப் பிறகு இவர் தம் மனைவியாருடன் மூர்த்தி தல தீர்த்தங்களை முறையாகச் செய்துகொண்டு, முடிவில் இராமேஸ் வரஞ் சென்று தீர்த்தாடனம் புரிந்து ஸ்ரீ இராம பிரான் பூசித்துய்ந்த அருள்மிகு இராமலிங்கப் பெருமானைப் பூசித்து வணங்கிப் போற்றிக் கொண்டு தம்மிடஞ் சேர்ந்து இருந்தனர். முற் பிறப்பிற் செய்த தவப்பயனுலும் ஸ்ரீ இராமலிங்கப்

பாகம்]

பெருமானாரின் திருவருளாலும் அவ்வம்மையார் கர்ப்பந் தரித்து உரிய காலத்தில் ஓர் ஆண் மகவைப் பெற்றனர். அப்போது விண்ணிலும் மண்ணிலும் நன் நிமித்தங்கள் பல தோன்றின! இவைகளைக் கண்ணுற்ற சில பெரியோர்கள் நம் சிவ குருநாதர் பெற்ற தவக்குழந்தையைக் கண்டு 'இக் குழந்தை முகப் பொலிவும் அகக்குழைவும் பெற்று விளங்குவதால் எதிர்காலத்தில் செயற் கரிய செய்யும் பெரியராய் விளங்குவது திண்ணம்'' என்றனர். இப்படிப் பலர் பலவாறுகக் கூறிப் புகழ்ந்தனர். "மங்கலமென்பமனைமாட்சிமற்றதன், நன்கலம் நன்மக்கட் பேறு." என்ற தமிழ்மறைப் படி நன்மகனும் நமது சுவாமிகளுக்கு இராமநாத ரருளால் பிறந்த குழந்தை ஆதலால் இராமலிங்கம் எனப் பிள்ளைத் திருநாமமிட்டனர். இக் குழந்தை அறமுடையாரின் செல்வம் போன்றும் பொறை யுடையாரின் ஞானம் போன்றும் நாளுக்கு நாள் வளர்ந்து வந்தது.

## இளமைப் பருவம்

பாலப் பருவம் நீங்கி குமாரப் பருவம் எய்திய இராமலிங்கத்தை முறைப்படி கல்வி கற்க நன்ஞ ளில் பள்ளியிற் சேர்த்து, கல்வி பயிலும்படி செய் தனர். முற்பிறப்புக்களிலேயே அனைத்துங் கற்ற இவர் வருத்தமின்றி பழைய பாடங்களைத் திருப்பு வதைப் போல ஆசிரியர்களும் மாணுக்கர்களும் வியக்கும் வண்ணம் எளிதில் கற்றுத் தேர்ந்தார். இவர் குமாரப் பருவம் நீங்கிக் காளைப் பருவம் எய்துவதற்கு முன்னமேயே தாய் தந்தையர் "எழு

பிறப்புந் தீயவை தீண்டா பழிபிறங்கா, பண்புடை மக்கட் பெறின்,'' என்னுந் தமிழ் மறைப்படி புண்ணிய சீலர்களாய் சிவபதவியை அடைந்தனர்.

இதனுல் சிறிதும் மனக் கவலை யற்றவராய், ''அவரவர் வினையின் அவரவர் வருவார் அவரவர் வினையளவுக்கே, அவரவர் போகம் என்றதே யாயின் ஆருக்கார் துணையதா குவர்கள், அவரவர் தேகம் உளபொழு துடனே ஆதர வாரென நாடி, அவரவர் அடைதல் நெறிகன் மத்து அடையுமா தரவு ஆதர வாமோ''. என்று மகாராஜத் துறவில் கூறியபடி விவேகத்துடனே யிருந்தார். இந்த இராமலிங்கச் சிறுவரின் நிலையைக்கண்ட ஆங்கில அரசு தம் காலாட் படையிலுள்ள வீரர்களுடன் சேர்த்து அனபோடு வளர்த்து வந்ததுடன் படைக்கலப் பயிற்சியும் இவருக்குப் பயில்வித்தனர். இச் சிறுவரும் ஆயுதம் பயிலல், பாய்மா ஏறல், துப்பாக்கியால் சுடுதல், தோள், வாள் முதலான போர்த் தொழில்களில் பயிற்சி மிக்க வல்லுனராய் வந்து காளைப் பருவம் எய்தினர். துரைத்தனத்தாரும் இவரது தந்தையார் செய்து வந்த உத்தியோக நிலைமையில் அமர்த்தி அப் பட்டத்தையும் அளித்து போர் வீரர் படைகளில் இவரை ஒரு வீரராகச் சேர்த்துக் கொண்டதோடு, ஸ்ரீ முருகப்பெருமான் கோவில் கொண்டுள்ள கந்த கோட்டம், வடபழநியும், சிவபெருமான் எழுந்தருளியுள்ள திருவொற்றியூர் மயிலாப்பூரும் கண்ணபிரான் காட்சி கொடுக்கும் திருவல்லிக் கேணியும் முதலிய திவ்விய க்ஷேத்திரங்கள் உள்ளனவும் தமது கிழக்கிந்திய கம்பெனி ஆட்சியின்

பாகம்]

முக்கிய நகராகவும் விளங்கும் தருமமிகு சென்னை மா நகருக்கு மாற்றி அவ்விடம் சேவை புரியுமாறு வைத்தனர்.

## யோகப் பிரஷ்டன்

ஒருவன் ஞானயோகப் பயிற்சியில் ஈடுபட்டு முற்றுப்பெருமல் இறப்பாளுயின் சிறு மேகமானது தனித்து மிராமல் மேகத்தோடுஞ் சேராமல் வியர்த்தமாய்ப் போவது போலப் போவனே?! எனப் பகவத் கீதையில் அர்ச்சுனன் ஸ்ரீ கண்ணபிரானைக் கேட்கிருன். அதற்குப் பகவான்; அத்தகைய சாதகர்கள் பெரிய அசுவமேத யாகங்கள் முதலான செய்து அடையப்படும் மேல் லோகங்களுக்கு எளிதில் சென்று போகங்களை அனுபவித்து, மீண்டும் வாசனைகளுக்கு ஏற்ப அரசர், செல்வந்தர், அல்லது ஞானிகள் குடும்பங்களில் பிறந்து முன்பு விட்ட இடத்திலிருந்து தொடங்கி முயன்று முற்றுப்பெறுவர். வியர்த்த மாவதில்லை! இன்னவனை யோகப்பிரஷ்டன் (யோகம் முற்றுப் பெருதவன்) என்பர்; என்று கூறிஞர்.

'யோக முடியா திடையே யிறந்தவன்
யாக வினைபல செய்தாங் கிசைந்திடுஞ்
சோகமில் நாடெய்தித் துன்பந் தொடராதே
போக நுகர்ந்து பல்காலங்கள் போயபின்,''

"சிறந்த வரசர் திருக்குலத் தாதல்
அறந்தரு யோகிகள் தங்குலத் தாதல்
பிறந்துபெறு வதெல்லா மெய்திப் பின்னும்
மறந்த வியோகம் மகிழ்வுடன் எய்தும்.''

(6 = 31 – 32)

இந்தப் பிரகாரம் நமது இராமலிங்கனும் சிறந்த யோகப்பிரஷ்டன் ஆதலால் தாம் முன் ஜன்மத்தில் விட்ட இடத்திலிருந்து தொடங்குவாராயினர். அதாவது, இவர் தமது போர்த் தொழிலைப் பலனைக் கருதாமல் நிஷ்காமமாகவே செய்தார்; இதனல். மனம் மிகத்தூய்மை பெற்றது. நிஷ்காம உபாசனை செய்தார், அதனுல் மனச் சலனம்—சஞ்சலம்—கவலை–இன்றியவராய் நிவாத தீபம் போல் விளங்கினர். இவர் பக்தி மிகுதியினுல் திருத்தணிகையில் எழுந்தருளியுள்ள ஸ்ரீ முருகன் மீது அருட்பா என்னும் நூலைப் பாடியுள்ளார். இச் செய்யுட்கள் சிலவற்றை அடியிற் காண்க.

## நேரிசை வெண்பா

தேன்பொழியும் நல்ல திருத்தணிகை வாழுகின்ற
கோனெனுஞ் சுப்ரமண்யக் கோமானை-நான்பணிந்து
அற்புதமார் இவ்வருட்பா அன்புடனே பாடுதற்குக்
கற்பகவி நாயகன்தாள் காப்பு.

### விருத்தம்

சீர்கொண்ட விண்புவியுஞ் சேர்ந்தபல யாவுஞ்
செப்பமுடனேபடைத்த தற்பரனுர் சேயே
பார்கொண்ட மெய்ஞ்ஞான பக்தருளத் திருந்து
பலகாலும் அருள்புரியும் விலைமதியா மணியே
பேர்கொண்ட தெய்வானை பிரியமுள்ள வள்ளி
பெட்புடனே தழுவுகின்ற நட்புடைய தோளா

பாகம்]

சூர்கொண்ட வினைகளென்னைத் தொடராமல் ஆளுஞ்
சொற்பரிய திருத்தணிகைச் சுப்ரமண்ய குருவே.

இடருவந்த போதென்னை எவருமதியாமல்
இருந்தபெருந் தன்மைதனை எண்ணியறியாமல்
அடருமென்னைச் சொற்பதமதாய் ஆதரையிலென்றும்
அகற்றினரே யல்லாது அருகணைத்த தில்லை
படருமிந்தத் துன்பமதில் பாதியுடலானேன்
பாதுப்ரிங் தாள்வதுன்றன் பாக்கியமே என்றேன்
சுடர் இலகு வேல்கரத்தில் ஏந்திமகிழ் கின்ற
சொறபரிய திருத்தணிகைச் சுப்ரமண்ய குருவே.

இவ்வாருகப் பாடுங் * தமிழ்ப் புலவராகவுந் திகழ்ந்தார், இராமலிங்க மென்னுங் தோபா சுவாமிகள்.

## விவேகமும் வைராக்கியமும்

அவர் தொடர்ந்து தேவாரம் முதலிய பன்னிரு திருமுறைப் பாராயணமும், உபநிடதம், கைவல்லியம் முதலிய ஞான நூல்களையும் படித்துப்பார்த்து நித்தியம் எது? அனித்தியம் எது? என ஆராயலானுர்.

---

* ஸ்ரீ தோபா சுவாமிகள் தமிழ்ப் புலவராகவுந் திகழ்ந்தார் என அறிந்த சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார் தமது கழக வெளியீடு க020 ' தமிழ் புலவர் வரிசை'' (இருபத்தி இரண்டாம் புத்தகம்) ஆசிரியர் திரு. சு. அ. இராமசாமிப் புலவரால் தொகுக்கப்பெற்று 1960-ம் ஆண்டு வெளியிட்ட நூலில் சேர்த்துள்ளனர். அவா யிருப்பின் படித்துப் பார்க்க.

"பொத்தையூன் சுவர்புழுப் பொதிந்துளுத் தசும்பொழுகிய பொய்க் கூரை, இத்தைமெய் யெனக் கருதிநின் றிடர்க்கடற் சுழித்தலைப் படுவேனை" எனவும்,

"பூத்தாரும் பொய்கைப் புனலிதுவே யெனக் கருதிப் பேய்த்தேர் முகக்குறும் பேதைகுண மாகாமே" எனவும் கூறும் திருவாசகம் முதலான வாக்கியங்களால் விவேகமும்.

"நெருநல் உளனொருவன் இன்றில்லை யென்னும்
பெருமை யுடைத்திவ் வுலகு",

எனத் திருக்குறளும் "இன்றைக் கிருந்தாரை நாளைக்கிருப்பரென்றெண்ணவோ திடமில்லையே" என்று கூறும் துறவு வேந்தர் தாயுமான சுவாமிகள் முதலான நிலையாமையைக் குறிக்கும் சொற்றொடர்களால் ஆராய்ந்து வைராக்கியமும் அடைந்தவரானார்.

## சற்குருவை நாடுதல்

அப்பூதி அடிகள் ஸ்ரீ திருநாவுக்கரசு சுவாமிகளைக் குருவாகக் கொண்டதைப் போல நமது இராமலிங்கனாரும் அநேக முற்பிறப்புக்களில் ஸ்ரீ முருகப் பிரானின் திருவவதாரமெனக் கூறும் ஸ்ரீ திருஞான சம்பந்தப் பெருமானையே குருவாகக் கொண்டு உபாசித்த வாசனையினால், இப் பிறப்பிலும் தோன்றாக் குருவான காழி வேந்தரே தமக்குக் குருவாக எழுந்தருளி அருளல் வேண்டும்

பாகம்]

என உறுதியுடன் தியானிப்பவ ராஞர். ஆம்; தேவாரமாகிய தமிழ் வேதம் அருளிச் செய்தவரும்

"கொள்ளே கொள்ள வீடுதவிக் கூற்றைப் பிடர்
தள்ளுந் திருஞான சம்பந்தர்," [பிடித்துத்

என்ற வாங்கே திருமணத்தில் பெரு மறையுங் கூறுதற்கரிய முத்தியைக் கொள்ளே விட்டவரும்,

"ஒப்பரிய தவஞ் செய்தேன் ஆதலின் உம்மடிகள்
இப்பொழுது தாங்கிவரப் பெற்றுய்ந் தேன்யான்"

என்ற வாறே அப்பர் சுவாமிகளால் முத்துச் சிவிகை தாங்கப்பெற்றவரும், மற்றும் பல எண்ணிறந்த பெருமைகளேயுமுடைய திருஞான சம்பந்தப் பெருமான் திருவடிவத்தை தம்மனத்துள் நீங்காது இருக்கும்படி செய்தார்.

## ஸ்ரீ ஞானசம்பந்தப் பெருமானின் அருளுபதேசம்

இயார் இயார் எந்த எந்த வடிவத்தில் என்னே உபாசிக் கின்றார்களோ அவரவர்க்கு அந்த அந்த வடிவாகி வந்து அருள் பாலிப்பன் எனப் பகவான் கண்ணன் தம கீதையில் (7—17...18) காரணப் பிரமமாம் அகண்ட அருவக் கடவுள் நிலேயினே

"யாவன்ஓ ருத்தன் யாதொரு தெய்வம்
மேவவ ருச்சனே யன்பின்வி ளேப்பான்
ஆவல்ச லிப்பறும் அன்பவ னுக்கே
யாவது முற்றும்அ ளித்திடு வேன்நான்,"

அளித்தவவ் வன்பொடும் அத்தெய்வம் நாளும்
களித்துவ ணங்கினர் காதல வெல்லாம்
வெளிப்பட முற்றும் அளித்திடு வேன்நான்
ஒளிப்பரி தாமுரும் அஞ்ச வுடன்றேய்.''

என உணர்த்திய வண்ணம் ஜகத் காரணமாம் சிவம்,'' 'அருவன் ஆயினும் அன்பர்க்கு உருவனுய் வருவன் என்பது மாமறை சொல்லுமே'', என்று சசிவண்ண போதத்தில் தேவியின் வாக்குப்படி ஸ்ரீ திருஞான சம்பந்த உருத்தாங்கி இராம லிங்கனுர் தியானத்தமர்ந்திருந்த போது அவரது உள்ளத்தில் காட்சி கொடுத்து "சிவம் ஒன்றே உள்ளது. மற்றைய தோற்றங்கள் அனைத்தும் இல்லது'' (* மித்தை) என மெய்யுணர்வு பெறுமாறு திடப்பட உணர்த்தி அருளினுர். அதனைக் கேட்ட நம் சுவாமிகள் "குரு பிரானின் பூரண அருள் பெற்றேன்'' எனப் பெருமகிழ்வுற்று "காழியர் தவமே கவுணியர் தனமே கலைஞானத் தாழிய கடலே அதனிடை அமுதே'' என்று இவ்வண்ணம பலவாருக மனம் பதை பதைத்து கண்ணீர் வார அழுது தொழுது ஆடிப்பாடி அருட் பரவசமுற்று மிகத் தீவிரமாக விசாரத்தில் ஈடுபட்டார். அவ் விசாரம் முற்றவே சொரூப ஆவரணம் (தனது வடிவத்தின் மறைப்பு) நீங்கினராய் சந்தேகவிபரீதமற்ற திடஞானம் பெற்று நிர்விகற்ப சமாதி என்னும் நனவிற் சுழுத்தி நிலைபெற்ருர். இங்ஙனம் இப்படி இருக்க.

---

* கானல் ஜலம் போல தோற்ரு மாத்திரம் உள்ள பொய்யை மித்தை என்பர்.

பாகம்]

## கால காலன் செய்த கடும் போர்



ஆங்கிலப் படைக்கும் எதிரிப் படைக்கும் போர் ஆரம்பமாயிற்று! அதில் நமது இராமலிங்கம் கலந்து கொள்ளாத காரணம் என்ன என்று படைத் தளபதி சிந்திக்குங் காலையில் மிக வேகமாக ஒரு பாய்மாவில் வந்ததைக் கண்டனர். தளபதியும் மற்றைய வீரர்களும் மகிழ்ந்தனர். போர் துவங்கியது!! ஈண்டு இராமலிங்கனாராகப் பாய்மா ஏறி வந்தது திரிபுரமெரித்த ஸ்ரீ சங்கரன் ஆதலால் எதிரி படைகளும் எதிர்த்து நிற்குமோ? பல புதுமைகளுடன் போர் நிகழ்ந்தது, புறமுதுகிட்டோடின மாற்றார் படைகள்!! வென்றது ஆங்கிலப்படை; ஆனால், வெற்றிக்கு மிக முக்கியமாக இருந்த வடிவம் மறைந்தது! குதிரை மட்டுமே இருந்தது!? வியப்பு நிகழ்ந்தது, தேடினர் கிடைக்கவில்லை; இருப்பிடத்தேகினர். உடல் ஆடாது அசையாது தறிபோல இருக்க, உள்ளமோ "எண்ணங்களெல்லாம் இறந்த விடத்து அறிவு மயமாகிய சீவன் தனது உண்மை வடிவில் நிற்கும்," எனப் *பதஞ்சலி கூறியவாறு இருக்கக் கண்டனர். ஒன்றும் புரியாதவர்களாய் ஆட்டிப் பார்த்தனர், அசையவில்லை எழுப்பினர் எழவில்லை ஆச்சர்யப்பட்டனர்; தளபதி உள்பட அனைத்துப் போர் வீரர்களும்!! இச்செய்தி காட்டுத்தீப் போல் எங்கும் பரவவே கூட்டம் கூடியது, பேரொலி எழும்பியது இதன் காரணமாக சிறிது நேரம் கழித்து நிட்டை கலைந்து வெளிமுகமானார். அப்போது அவரது வாயிலிருந்து தோ-பா-, தோ-பா- என்ற எழுத்துக்கள் இரண்டு பலமுறைகள் வெளி

---

* அடயோக இராஜயோக சூத்திரங்கள் இயற்றியவர்

யாயின; அருகிருந்த தளபதி யானவர் நிகழ்ந்த யாவுங் கூறினார். இதனைக் கேட்ட நம் சுவாமிகள் "நாம் இவ்விடமே இருக்க நடத்தியது இறைவன் திருவிளையாடல்" எனக் கூறினர். இதனைக்கேட்ட தளபதி மிக வியந்து "He is not an Ordinary Man but he seems to be a Divine person." (இவர் சாமான்ய மனிதர் அல்லர் வியக்கத் தக்க தெய் வீகம் பொருந்திய மகானே) எனக் கூறினார். அனை வருமாக வணங்கி அவரவ ரிடங்களுக் கேகினர்.

"அன்னவன் திருப்பொன் னடிக்கரிய தாவருந் தவம்செய் நெஞ்சே, பின்னைமுன் னவன்வுல கறிந் திறைஞ் சுமாபெருமை செய்குவன் ஒரே", என்ற வைராக்கிய சதக வாக்கியப்படி இறைவனோடு ஒன்றிய நமது இராமலிங்கனாரை இறைவன், தோபா சுவாமிகள் எனப் பெயர் பூண்டு உலக மெலாம் வணங்குமாறு செய்து விட்டார்.

## தோ - பா - என்பதின் விளக்கம்

தோவை முதலாகக் கொண்டு தோடுடைய செவியன் என்று பா-பாடிய தங் குருமூர்த்தியான ஸ்ரீ திருஞான சம்பந்தப் பெருமானை நினைவு கொள் வது ஆகும். இது நமது சுவாமிகளின் குருபக்தி யைக் குறிப்பதாகக் கருதலாம்.

இரண்டாவதாக — "பல பொழுதுங் கண் மூடிச் சமாதியிருந்தான் விழித்துப் பார்த்தபோது, பலவடிவாஞ் சராசரச் சித்திரங் களெல்லாந் தோன்று மொரு படமா னுனே", எனக் கைவல்லிய நவநீத

பாகம்]

வாக்கியப்படி நம் சு வா மி க ளு ம் அதிஷ்டான சேதனமான ஆன்ம தரிசனம் பெற்று இருந்து, பின்னர் வெளிப்படும்போது பாதிதானுவிருத்தி யால் (பொய் என்று நிச்சயித்த பின்னுங் கானற் சலம் போல) தோன்றுகின்ற தோ—தோற்றங்க ளெல்லாம், பா – பாதம – பொய் என்று நிச்சயம் என்ற கருத்துப் படக் கூறினர். எனினும் அமை யும். அமையவே, நமது சுவாமிகளின் திடஞானத் தைக் குறிப்பாகக் கருதலாம், இவ் விரண்டில் எதைக் கொள்ளினுங் கொள்க.



## துறவு நிலையை மேற்கொள்ளுதல்

வெகூதகம், குடீசகம், அம்சம், பரம ஹம்சம், திகம்பரம். எனத் துறவுத் துறையில் பல வுள. அவற்றில் மந்தம், மந்த தரம், தீவிரம், தீவிர தரம் என்னும் வைராக்கிய மனநிலையைப் பொருத்து ஷை துறவு நிலை ஒன்றைப் பெறுவர். இறைவனை அடைவது ஒன்றே வாழ்க்கையின் குறிக்கோள் என்ற முடிவுடைய ஒருவனுக்கு எப்பொழுது வாழ்க்கையில் விரக்தி உண்டாகின்றதோ அப் பொழுதே விட்டுப் போகலாம்? அவனுக்கு எந்த விதமான பாவமுமில்லை! பழியுமில்லை!! என்பது வேதாந்தத்தின் கோட்பாடு என ஸ்ரீ ஆதி சங்கர பகவத்பாதாள் கூறியுள்ளனர் இவற்றில் ஞானம் பெறும் பொருட்டு மேற்கொள்ளுஞ் சந்நியாசம் விவிதிஷா சந்நியாசம் என்றும், பிரமமச்சரிய, இல்லற ஆஸ்ரமங்களில் இருக்கும் பொழுதே ஞானம் பெற்று முத்தியை யடைந்து ஜீவன் முத்த னய்த் திகழ்ந்த பின்னும் விலக்ஷணனந்தம் (வேருன பெரிய ஆனந்தம்) அனுபவிப்பதற்காக

நிவிர்த்திப் பிராரத்தம் உள்ளவர்கள் மேற்கொள் வது வித்வத் சந்நியாசம் (துறவு) என்றுங் கூறு வர். அவற்றில் மிக மிக உயர்ந்தது திகம்பரம் (திக்குக்களே ஆடை) என்னுந் துறவே யாகும். இதுவே தம் நிலைக்குச் சரியானது என்றும்

"துறந்தார் பெருமை துணைக்கூறின் வையத்து
இறந்தாரை எண்ணிக்கொண் டற்று."

என வள்ளுவப் பெருந்தகையும்,

அறந்தா னியற்று மவனினுங் கோடி யதிகமில்லந்
துறந்தா னவனிற் சதகோடியுள்ளத் துறவுடையோன்
மறந்தா னறக்கற் றறிவோ டிருந்திரு வாதனையற்று
இறந்தான் பெருமையை யென்சொல்லு வேன்கச்சி
யேகம்பனே,

எனத் துறவு வேந்தர் பட்டினத் தடிகள் முதலான பெரியோர்களும் கூறியுள்ளார்கள் என்றும்;

எட்டுவகை ஆனந்தங்களிலும் முக்கிய நிசானந்த மென்னும் யோகானந் தத்திலேயே தாந் திளைக்க வேண்டும் என்றும் இவ்வாறு நம் தோபா சுவாமிகள் மிகத் தீவிரமாகச் சிந்தித்தார்.

"மற்றுந் தொடர்பா டெவன்கொல் பிறப்பறுக்கல்,
உற்றார்க்கு உடம்பும் மிகை."

என்ற திருக்குறளினை எண்ணினவராய் உடம்பே மிகையாயிருக்க இவ் வுடைகள் எற்றுக்கு என ஆடைகளைக் கழற்றித் தூக்கி எறிந்துவிட்டு, தமக்குரிய பொருள்களை விரும்பினவர்க்கு விரும்பிய வாறே தானஞ் செய்தும் திகம்பரத் துறவையே மேற்கொண்டு எங்குந் திரிய ஆரம்பித்தார்.

பாகம்]

## தோபா இராமலிங்கமும் வடலூர் இராமலிங்கமும்

தம்பிரான் தோழன் விரும்பியவாறு சங்கிலி நாச்சியாரைச் சம்மதிக்கச் செய்து திருமணஞ் செய்வித்த சிவ பெருமான் உறைவதும்; பேய்க் கரும்பு இனித்த இவ்விடமே இறைவனோடு சாயுஜ்ஜிய நிலைபெற்றிருக்க உகந்த இடமெனப் பட்டினத்தடிகள் சமாதி கொண்ட ஸ்தலமுமான, திருவொற்றியூரில் நம் தோபா சுவாமிகள் ஒருநாள் தெரு ஓரமாக அமர்ந்திருந்தனர். அத் தெருவில் போவோர் வருவோரைப்பார்த்து அவரவர் குணாங்களுக்கேற்ப நாய் போகிறது, நரி வருகிறது, கழுதை கத்துகிறது, பேய் திரிகிறது, எனப் பகர்ந்த வண்ணமிருந்தனர்.

அந் நேரத்தில் வடலூர் ஸ்ரீ இராமலிங்க அடிகள் அத்தெரு வழியாக வரவே மனிதர் வருகிறார் என்றார். இதனைக் கேட்டு அருகில் நின்றுகொண்டு இவர் ஒரு பயித்தியம் என எண்ணியுள்ள சிலர் ஆச்சர்யப்பட்டு நம் சுவாமிகளை வினவினர். ஆம்; இவர்தாம் மனித வடிவிலுள்ள மனிதர் (மகான்) மற்றையவர்கள் மனித வடிவிலுள்ள மிருகம் முதலானவர்கள் என்றார். இதனைக் கவனித்த ஸ்ரீ இராமலிங்க வள்ளலாரும் தம் அருட் கண்ணால் பார்த்து இவரும் யாமும் ஒத்த நிலையுடையேம். இவர் திக்கு ஆடையினர்; யாம் வெண்ணிற ஆடையினேம். இதுவே வேறுபாடு எனக்கூறி நமது தோபா சுவாமிகளிடம் சிறிது நேரம் அளவளாவிப் பேசிவிட்டு பிரிவாற்றாது நீங்கிப் போனார்.

## முஸல்மானின் முனிவும் பணிவும்

நமது தோபா சுவாமிகளும் அத் திருவொற்றியூரை விட்டு ஏகி சரீர சிந்தனையற்று "அகண்ட சிவமே யாம்" என்ற திட ஞான நிலை நின்றவருய் பல இடங்களில் சஞ்சாரஞ் செய்து கொண்டு வருங்கால், ஒருதினம் பகலில் மகம்மதியர் வசிக்கும வீதியில் சென்று கொண்டிருந்தனர். அங்கு மிக்க செல்வமுள்ள ஒரு முகம்மதியன் மனைவி கோவணமும் இன்றிப் பாலன் போலச் செல்லும் சுவாமிகளைக் கண்டு நாணமுற்றுத் தன் கணவன்பால் "இவ் வெறியனை வெளியில் ஓட்டுவீராக" என்று கூறினள். அருளமுதுண்டு ஞானவெறி கொண்டு உலவும் பெரியார் இவர் என்பதனை அறியாதவன் ஆதலால் அவன், தன் மனைவியின் சொற்படியே சுவாமிகளைப் பலவாருக வைது தன் வேலையாளை அழைத்து "இவ்வெறியனை வெளியில் துரத்துவாய்" என உத்திரவிட்டான். அந்த ஏவலாளனும சுவாமிகளைக் கண்டு ஏளனச் சிரிப்பு செய்து வைது சாக்குப் பை தைக்கும் ஊசியை ஆண் குறியில் படுமாறு வீசினன். சுவரைப் பார்த்து பந்தை அடித்தால் திரும்பி அடித்தவன் மேலேயே விழுவது போல் அந்த ஊசி இப் பெரியாரைத் தாக்காமல் எறிந்தவன் அடி வயிற்றிலேயே திரும்பிவந்து குத்திக் கொண்டது; குத்திக் கொண்ட ஊசியை பலவாறு முயன்றும் பிடுங்க முடியவில்லை! வலியோ விஷம் ஏறுவதைப் போல அதிகரித்துக் கொண்டே போயிற்று!! அப்போது தான் சுவாமிகள் பெருமையை உணர்ந்தான். சுவாமிகளின் திருவடிகளில் வீழ்ந்து வணங்கித் தன் தவறினைப் பொறுத்துக் காத்தருள வேண்டுமென்று கெஞ்சிக் கேட்டுக்கொண்டான்.

பாகம்]

இவ் வண்ணம் அம் மகம்மதியன் வேண்டுதல் செய்ய சுவாமிகள் மன மிரங்கித் திருவருள் நோக் கஞ் செய்த மாத்திரத்தில் தானே வெளியிற் கழன் றதோடு வலியும் இல்லா தகன்றது !! அவன் எய்திய ஊசி இப்பெரியார் திருமேனியில் பட்டிருந் தாலும் சிறிதும் நோ வுண்டாகாது என்பது திண் ணம. சுவாமிகள் திருவிளையாட்டாகவும் துட்டர் கள் இவ்வாறு பெரியாரைப் பழித்து பெரும்பாவம் தேடி அருங் கோர நரகில் விழாம லிருக்கவே இவ் வண்ணம் செய்ததாம். இது துட்டரை நிக்கிரகஞ் செய்து ஆட்கொள்ளும் மறக் கருணையாம்.

இதனை யெல்லாம் கண்ணுற்ற அம் முகம்மதி யப் பிரபு நமது தோபா சுவாமிகளின் மகிமையை உணர்ந்தவனுய்த் திருவடிகளில் வீழ்ந்து வணங்கி மன்னிப்புக் கேட்டுக் கொண்டான். அவ்வளவில் அமையாது "தோப்பா மசூதி" என்று சுவாமிகள் பெயரால் ஒரு பள்ளி வாசலையும் அமைத்து தம் அல்லாவோடு சமமாகப் பாவித்து வழிபட்டு வந் தான என்ருல் பெரியார் பால் அவன் கொண்டி ருந்த நன் மதிப்பை என்னென் றுரைக்கலாகும். சென்னை மாநகரில் "தோபா மசூதி" என்னும் பெயராலேயே இன்றும் வழங்கப்பட்டு காட்சி யளிப்பதே போதிய சான்று ஆகும்.

## தோபா சுவாமிகள் சங்கம்

இங் நிகழ்ச்சிகளைக் கண்ணுற்ற மயிலாப்பூர் பக்தர்கள் சுவாமிகளை வணங்கி வாழ்த்தி அனுக் கிரகம் பெற்று சுவாமிகள் பெயரால் ஒரு சங்கம் ஏற்படுத்தி சுவாமிகளின் திரு உருவப் படத்தை

வைத்து நாள்தோறும் வழிபடுவராயினர் இன்றும் "தோபா சுவாமிகள் தர்ம பரிபாலன சங்கம்" என வழங்கப்பட்டும்; அதில் திருமணம் முதலிய மங்கல காரியங்கள் சிறப்புற நடைபெறுவனவும் காணலாம். இது சிட்டரைப் பரிபாலனம் செய்யும் அறக் கருணையாம்.

இப்படி துட்டர், சிட்டர் ஆம் சகல சீவர்களையும் தன் மயமாக்கும் "வசித்துவம்" என்னும் எட்டாவது சித்தியை வெளிப்படுத்திய வாறாயிற்று.

## காவலன் கை கட்டை யாதல்

ஒரு நாள் இம் மகானுபாவர் வீதியில் படுத்திருக்குங் கால் ஊர்க் காவலன் (போலீஸ்காரன்) ஒருவன் மிக முனிந்து "பாட்டையிற் கிடக்கின்ற ஓட்டைச் சட்டியை யுடையவனே நீட்டிப் படுக்க இடமில்லாது மக்கள் கூட்டங் கூட்டமாய்ச் செல்கின்ற வழியில் ஏன் பிணம் போல் கிடக்கின்றாய்"? என்று பலவாறாக நிந்தித்து பலமுறை அதட்டி எழுப்பியும் "கீர்த்தியும் நிந்தையுஞ் சமமாக்ன்னி பாவிக்கும்" நமது சுவாமிகள் உதாசீனமாயிருந்தனர். அந்தப் போலீஸ்காரனும் முன்னிலும் அதிகமாகக் கோபங் கொண்டு கைப் பிரம்பால் அடிக்கக் கையை ஓங்கினான். "மாயோன் முதற் கடவுள்" என நிறுவுங்கால் எடுத்த வியாத முனிவரின் கை தம்பித்து நின்றவாறே ஓங்கிய அக் கை ஓங்கிய வாறே கட்டைபோல் தம்பித்து நின்றுவிட்டது! ஆனால் அடிக்க வேண்டும் என்று எண்ணிய அடி அவன் மனைவியின் மீது பட்டது. சுவாமிகளின் பெருமையை உணராமல் செய்த தவறை நினைந்து

பாகம்]

வருந்திஞன் சுவாமிகளின் திருவடிகளில் வீழ்ந்து 'செயற்கரிய செய்த பெரியோய் அதிகார மமதை யால் புரிந்த அடாத செயலை மன்னிக்கவும்; "துற விக்கு வேந்தனே துரும்பா'' யிருக்க எறும்பு போன்ற அற்ப அதிகாரம் கொண்ட அடியேன் தங்களுக்கு ஒரு பொருளாமோ? குறும்புத்தன மாகச் செய்ததைப் பொருத்தருள்வை'' எனப் பல வாருக வேண்டிஞன். இம் மகானும் திருவுள மிரங்கி அருள் நோக்கஞ் செய்தனர். அவன் கையா னது முன் போலவே இயக்கம்பெற்று நலமுற்றது.

இதனுல் சர்வ ஜீவர்களையுந் தனது ஆணைவழி செலுத்துதலாகிய 'ஈசத்துவம்'' என்னும் ஏழாவது சித்தியை வெளிப் படுத்திய வாருயிற்று.

அவ் வூர்க்காவலன் சுவாமிகள் பால் வணங்கிக் கேட்டும் "அப்படித்தான் அப்படித்தான்'' எனப் பதில் திருவாய் மலர்ந்தருளவே கை தம்பித்த வண்ணமே நின்றதன்றி அவன் மரபில் பின்வந்த மூன்று தலைமுறையினருக்குக் கூட அப்படி இருந்த தாக மற்றெரு விதமாகக் கூறுவாறுமுளர்.

குய
அம

## போலி மஸ்தான் காலியாஞர்

இவ் வண்ணம் சுவாமிகள் ஞான சித்தராய்த் திரிந்து கொண்டிருக்குங்கால் ஒருநாள் மஸ்தான் என்ற பெயரால் அழைக்கப்படும் முகம்மதியத் துறவி ஒரு குழி எடுப்பிக்கச் செய்து அக்குழியில் இறங்கி இருந்துகொண்டு சமாதியில் இருப்பவர் போல் நடித்துப் பின் வெளி வருவார். வந்து சில தினங்கள் சென்று மீண்டும் அப் பள்ளத்தில்

[முதலாவது

இறங்கி யிருந்து வெளிவருவார்! இவ்வாறு பல நாட்கள் செய்தமையால் மக்களுக்கு அவர் பால் பெரியதொரு நன்மதிப்பு வளர ஆரம்பித்தது. நமது தோபா சுவாமிகள் அவ்விடம் வரும்படி ஆயிற்று. இவரது வஞ்சகச் செயலை, தாம் இருந்த இடத்திலேயே எண்ணிய பொருள்களைத் தெரிந்து விளையாடல் ஆகிய "பிராகாமியம்" என்னும் ஆருவது சித்தியால் அறிந்துகொண்டு அம் முகம்மதியத் துறவி செய்யுங் கபட யோகச் செயலை விளக்கிக் கூறியதன்றி, நாட்டில் இவ்வாறு தீமை செய்பவர்களால் மக்களுக்குப் பெரிதும் அல்லலே உண்டாகும் என அவரை விட்டுவைக்க; மனமில்லாதவராய்; "மக்களே, அவர் செய்வது கபட நாடகம்! மெய்ச் சமாதியன்று!?" என்று சொல்லி, அவர் இறந்து விட்டார்! அவரைப் பார்க்கக் காத்திருக்க வேண்டாம் என்றுரைத்து அவ்விடம் விட்டு அகன்ருர். இந் நிர்வாணி கூறியது உண்மைதாஞ என்றறிய சில பேர் குகையைத் திறந்து பார்த்தனர். அம் முகம்மதியத் துறவி மாண்டு போயிருக்கக் கண்டனர். "போலி மஸ்தான் காலியாஞர்" என்று கூறினர். இந் நிகழ்ச்சிக்குப் பிறகு நிறைமொழி மாந்தராம் நமது தோபா சுவாமிகளிடத்து முன்னிலும் பன் மடங்கு பேரன்புடையவர்களாஞர்கள்.

## கள்ளந்தனைத் தவிர்த்த குரு

சுவாமிகள் வேளச்சேரி என்ற ஊருக்குச் சென்றபோது சிதம்பர சுவாமி என்னும் பெயருடைய பெரியார் அவ்வூரில் மடமொன் றியற்றி அதில் ஒரு குகையுஞ் செய்வித்து அதற்குள் இருந்து வரலாஞர். அவரைக் கண்ட சுவாமிகள்

பாகம் ]

''மண்ணில் வளை கெல்லிக்கொண்டு வசிப்பது எலி யேயாம். பகுத்தறிவுடைய நீயும் எலிபோல் வளைக் குள்ளிருத்தல் எற்றுக்கு?'' என்று திருவாய் மலர்ந்து உள்ளக் குகையில் ஒளித்திருந்த பரனின் கள்ளந்தனைக் காட்டி அருளினுர். இதனையே குரு வாக்கியமாகக் கொண்டு மெய்ப் பொருளுணர்ந்து அச்சிதம்பர சுவாமிகள் ஞான நிட்டை யுடையவ ராயினுர்.

இது பக்குவம் அடைந்த அதிகாரிகளுக்கு ஞானுேபதேசம் செய்யும் உத்தம ஆச்சாரிய நிலையை வெளிப்படுத்திய வாருயிற்று.

## அருட்பெருஞ் சோதியாய்க் காட்சி கொடுத்தல்

ஞாஞசாரிய சுவாமிகள் இவ் வண்ணம் வேளைச்சேரி என்னுங் கிராமத்தில் பலவிதமான திருவிளையாடல் புரிந்து கொண்டிருந்தனர். ''விடு நமக்குப் புறத்திண்ணை உண்டு'' என்ற பட்டனத் துப் பிள்ளையார் வாக்குப்படி ஒருநாள் இரவில் ஒரு குயவனுருடைய வீட்டுப் புறந் திண்ணையில் அமர்ந்து கொண்டு உள்ளிருளைத் துலக்கி நள்ளிருளை விலக்கி ஆன்ம வொளியைப் பரப்பி அருட்பெருஞ் சோதியாய்த் திகழ்ந்திருந்தருளினர். அப் பாதி இரவில் அவ் வில்லக் கிழத்தி யானவள் வெளியே வர அந்த அருளொளிப் பிழம்பைத் தனது கண்ணுரக் கண்டு அச்சமும் ஆச்சர்யமும் அடைந்து உள்ளே சென்று தங் கணவனுரிடம் பகர்ந்தாள். கணவன் வெளிப்போந்து பார்க்குங் கால் ''அகச் சமயத்து ஒளியாய் புறச் சமயத்த வர்க்கு இருளாய்'' விளங்கும் பரஞ்சுடர் போல்

மறைந்து விட்டனர். இதனால் குயவன் மிக மிக வருத்தம் கொண்டு காதுக்கெட்டியது கண்ணுக் கெட்டவில்லையே என்று கவலையுடன் தானும் மனைவியுமாகப் பலவிடங்களிலும் தேடிச் சுவாமி கள் இருக்குமிடம் தெரிந்து தரிசித்து பலவாறு துதித்து "அரியவற்று ளெல்லாம் அரிதே பெரி யாரைப், பேணித் தமராக் கொளல்" என்ற வள்ளு வர் திருவாக்குப்படி அரிதேயாயினும் திருவுளங் கொண்டு தம் இல்லத்திற்கே மீண்டும் எழுந்தருள வேண்டினன். அது கேட்ட நமது தோபா சுவாமி கள் "உங்கட்கு வேண்டுவது யாது"? என வினவ

"பெறுமவற்றுள் யாமறிவ தில்லை அறிவறிந்த
மக்கட்பே றல்ல பிற"

என்று தமிழ் மறை விதித்த வாறு நன் மக்கட் பேறே எங்கள் விருப்பம் என்றனர். அது கேட்ட சுவாமிகள் தமது சட்டியில் தாம் அருந்திய பரிகலச் சோறு ஒன்றை அக்குயவன் மனைவிக்குக் கொடுத்து உண்ணும்படிச் செய் தனர் "இதை யருந்தியதால் உன் வயிற்றில் ஒரு சித்தன் பிறப்பான்"! என்று நல் வரமும் ஈந்தனர். இளம் பருவத் தவளாய்க் கருவுற்று நன் மகனைப் பெற்றாள். அவரே ஓதா துணர்ந்து பெருந் துற வடைந்து "ஏகாம்பரச் சிவயோகி" என்னுந் திரு நாமத்துடன் விளங்கி ஸ்ரீ சங்கராச் சாரியரால் மதிக்கப் பெற்று முத்தி யெய்தினர். இதனால் பெரி யார்களின் பரிகலச் சேடத்தின் மகிமை அளவிடற் கரிய தென விளக்கிய வாறாயிற்று.

## வறுமையை வெறுமை ஆக்கின பெருமை

மற்றொரு குலாலன் புற்றீசல் போலப் புதல்வர் களைப் பெற்றுக்காக்க வழி அறியாது தவித்தான்.

வறுமை "குடிப் பிறப்பழிக்கும், விழுப்பங் கொல் லும்" என்னும் மணிமேகலை வாக்கியப்படி மிகக் கொடிய வறுமையை நினைந்து நினைந்து அவன் மனைவியுங் கவலை கொண்டிருந்தாள். இஃது அறிந்த சுவாமிகள் சீவ காருண்யத்தால் அவ் வீட்டினுள் நுழைந்து அவனை நையப் புடைத்த னர். அப் புண்ணிய சீலன் சுவாமிகள் கருணை புரிந்ததாகத் தன்னுள்ளத்துட் கொண்டு வெளி யூருக்கு ஓடிப்போய் விட்டான்.

இதனால் சுவாமிகள் அவ் வீட்டுப் புறந் திண்ணையில் இருந்து கொண்டு

இருக்கு மிடந்தேடி யென்பசிக்கே யன்னம்
உருக்கமுடன் கொண்டுவந்தால் உண்பேன்—பெருக்க
அழைத்தாலும் போகேன் அரனே யென் தேகம்
இளைத்தாலும் போகேன் இனி.

என்ற பட்டினத் தடிகள் வாக்குப்படி இருப்பேன் எனக் கூறித் தங்கி விட்டார்.

அவ் வூரிலுள்ளார் இம் மகான் அமர்ந்துள்ள இடந்தேடி வந்து உணவு அளித்துப் போனார்கள். தமக்கு வந்த அவ் வுணவினால், அக் குழந்தைகளை யும். தாயையும் பாதுகாத்து வந்தனர். குயவன் வறுமையை உணர்ந்து அதற்காகச் சுவாமிகள் அவ் விட்டிற்றங்கி யிருக்கும் நிலைமையை அறிந்த சில அன்பர்கள் அக் குயவன் மனைவிக்கு வேண்டிய பொருளுதவி புரிந்தனர். இப்படியாக அக்குயவன் குடும்ப வறுமையை வெறுமை யாக்கினார்கள் நமது தோபா சுவாமிகள்.

"நெருப்பினுள் துஞ்சலும் ஆகும் நிரப்பினுள்
யாதொன்றுங் கண்பாடு அரிது,"

என்று தமிழ் மறை கூறுங் கொடுமை மிக்க வறுமையைப் போக்கிய கருணைதான் என்னே! என்னே !!

## அஸ்த மஸ்தக சையோக தீட்சை

சுவாமிகள் இவ் வண்ணங் திருவருள் புரிந்து விட்டுத் திரும்புங் கால் விரக்தி யுற்ற உண்மைத் தொண்டன் நற்கதி அடையும் எண்ணங் கொண்டு எதிரில் வணங்கி நின்றான். அவனை நமது சுவாமிகள் திருக் கரத்தால் தலையைப் பிடித்து ஈர்த்து வடக்கு நோக்கித் தள்ளி விட்டனர், தள்ளவே அவன் உண்மை அறிவு தோன்றியவனாய் அவ் வாறே வட திசையை நோக்கிச் சென்று முடிவில் மா தவஞ் செய்து உய்ந்தனன். இது அவனுக்குத் தெய்வ கதியால் வந்த அஸ்த மஸ்தக சையோக உபதேச நெறியாம்.

இவ்வாறு பக்குவிகளுக்கேற்ற அறக் கருணை செய்வதும் மற்றைக் காலங்களில் பிரளய காலத்து வெள்ளக் கடல் போன்ற பிரம்மா னந்தத்தில் மூழ்கித் திளைப்பதும்; பின் விழிக்கின், தமக்கென விதி விலக்குகள் அற்றவராய், போற்றினுந் தூற்றினும் பெருமை சிறுமைகளையும் பாராது வரைவற்று வேண்டியவாறு செய்து கொண்டிருந் தனர். முற் பிறப்புக்களின் தொடர்பு காரண மாக நாய் வடிவங் தாங்கிய நான்கு சீடர்களும்

பாகம் ]

தம்மைச் சூழ்ந்து திரியுமாறு சட்டி யொன்று மொட்டைத் தலையிற் கவித்துக் கொண்டு காட்சி தந்து கொண்டிருந்த விநோத நிலையை என்னென்றுரைப்பது !

## மது :— பால், தயிர் ஆதல்

இப்படி அற்புத மகிமைகள் பல சுவாமிகள் பால் நிகழ்வதுணர்ந்த அன்பர் பலரும், சுவாமிகளை வணங்கித் துதித்து நல்லாசிகளைப் பெற்றுச் செல்வாராயினர். இதனைக் கண்ட சில வன்பர்கள் (மூடர்கள்) சுவாமிகளின் மீது பொருமை கொண்டனர். தீங்கிழைக்கவுந் துணிந்தனர், ஒருநாள் பவக் கடலைக் கடந்து ஞானப் புணையால் மோட்ச மாகிய கரையை அடைந்துள்ளதைப் புலப்படுத்துவது போன்று சென்னைக் கடற்கரை வழியே சென்று கொண்டிருக்கும் தருணத்தில் அங்கிருந்த ஊணர்கள் எள்ளி நகையாடி பித்தன், பேயன் என்பன போன்ற வார்த்தைகளால் வைததுமின்றி கொலை புரியத் துணிந்தவர்களாய் மரணம் விளைக்கக் கூடிய விஷம் கலந்த கொடிய மதுவைக் கொடுத்தார்கள். அம் மது ஆவின் பாலாய் மாறியது ! அதை நாய்கள் பருகின.

"இவன் (திருநாவுக்கரசர்) நம் சமண மந்திர பலத்தால் விஷமுண்டும் சாகான் ஆயினன்" எனத் துட்டச் சமணர்கள் பல்லவ மன்னனுக்குச் சொன்னது போல; இதைக் கண்ட அவ் வீணர்கள் "இவன் மந்திர பலத்தால் இவ்வாறு செய்தான்" எனக் கூறி, மீண்டும் அத்தகைய மதுவையே

கொடுத்தனர். அம் மதுவையும் முன் போலவே தமது சட்டியில் பெய்து தயிராக்கி நாய்கட் களித்தனர். இப்படிக் கொடுமை படுத்திய பாவிகளிடத்தும் □ ஞானி குணங்களில் நான்காவ தான *உபேட்சையையே கைக் கொண்டனர்.

## வலிந்தளித்த புத்திரப் பேறு

மற்றொரு நாள் நமது அருள்மிகு தோபா சுவாமிகள் வீதியில் எறிந்த எச்சில் இலைகளைச் சேர்த்துக் கொண்டு ஒருவனது வீட்டின் முன் சென்று அவ் வீட்டிலுள்ளானைப் பல வகையாகக் கொடுஞ் சொற்கள் கூறி வைதருளினர். அதை அவன் தனக்குச் செய்த மறக் கருணை யென்று அறியாமலும், சுவாமிகள் நிலைமை இன்னதென்று தெரிந்து கொள்ளாமலும் மிக வெகுண்டு, "அடே! பிச்சைச் சோற்றின் பொருட்டு எச்சிலையைத் தேடும் பேயா? உனக்கு என்ன குறும்பு?" என்று பலவாறுக வைது அடிக்கவும் முயன்றான். "அறியாமையிற் கீழவர் பல்பிழை யாற்றினலும், குறியா தருள் செய்வது மேலவர் கொள்கை," என நம் சுவாமிகள் எண்ணினவராய் முனிவு செய்யாமல் அவன் நாணுமாறு இரண்டாய்ச் சேர்ந்துள்ள ஒரு கனியை அவன் எதிரில் வீசி எறிந்து "இதை அருந்தினல் பேருண்டு" என்று கூறி மறைந்தருளினர்.

□ ஞானியினது குணங்கள் :--1. மைத்ரி, 2. கருணை 3. முதிதை, 4. உபேட்சை

* விருப்பு வெறுப்பு இன்மை

பாகம்]

நல்லுணர் வுண்டானவனுய்த் தன் தவறுக்குப் பெரிதும் வருந்தி இறைவனே இவ் வடிவாய் வந்தருளியுள்ளான் என்று தெளிந்து 'மாதவஞ் செயினுஞ் செய்வார் வாணிபஞ் செயினுஞ் செய்வார், பூதலம் புரப்பார் ஐயம புதுந்துண்பார் ஜீவன் முத்தர்; என்றும் "உலகுபகாரம் ஞானிகள் விவகாரம" எனவும் கைவல்லிய நவநீத வாக்கியங்களை நினைவு கூர்ந்து மதி கெட்டேன், துதி விட்டேன் எனப் பலவாருகக் கூறி வருந்திக் கொண்டு அக் கனியை எடுத்துத் தனது மனைவிகள் இருவரிடமும் கொடுத்து ∴தோபா சுவாமிகளின் திரு உருவத்தை தியானித்துச் சாப்பிடுமாறு கூறினுன். அவருள் ஒருமாது அதை எச்சில் என உபேட்சித்தாள். மற்ருெரு மாதோ இது பெரியாரின் அருட் பிரசாதம் என அன்போடு கணவன் சொற்படியே செய்தாள். அது முதற் கொண்டு அவள் கருவுற்று இருந்து நல்லாண் மகவு ஒன்றைப் பெற்றெடுத்தனள் அக் குழந்தைக்குத் 'தோபா" எனப் பெயரும் வைக்கப்பட்டது. அன்று முதல் அவ் அன்பனும் பல வகை நலங்கள் பெற்றுய்ந்தனன். இப்படி வலிந்தாட் கொள்வதும் ஒருவகை அருள் என்பதை நமது சுவாமிகள் காட்டியவாருயிற்று.

---

∴ சுவாமிகள் அடங்கிய 1850-ம் ஆண்டு முதல் இன்றளவும் மகப்பேறு வேண்டி சுவாமிகளின் திரு உருவத்தைத் தியானித்துப்பிரார்த்தித்துக் கொண்ட அநேகம் பேர்களுக்கு மகப் பேறுகள் உண்டாயின. அக் குழந்தைகளுக்குத் தோபா என்னும் பெயரே வைக்கப்பட்டுள்ளது. இப்படித் தோபா என்னும் பெயரை உடைய அநேகம் பேர்களை வட, தென் ஆற்காடு, சென்னை, செங்கல்பட்டு ஆகிய மா வட்டங்களில் இக் காலத்துங் காணலாம்.

[ முதலாவது

## சுவாமிகளின் சிறைச்சாலைத் திருவிளையாடல்

மற்றொரு நாள் சென்னை மாநகரின் ஒரு பகுதியின் தெருவில் முகம்மதிய அதிகாரி யானவன் உடம்பெங்கும் ஆடையினால் மூடிக் கொண்டுள்ள தம் மனைவியுடன் வண்டியிலேறிச் செல்லும்போது அவ் வழியே பாலன் போல நமது தோபா சுவாமிகள் போய்க் கொண்டிருந்தனர். அவ் வதிகாரி முனிந்து, பிறந்த மேனியாய்ச் செல்லும் இப் பித்தனைச் சிறையில் அடையுங்கள் எனத் தனது ஏவலாளருக்கு ஆணை யிட்டான்! ஆணையை மேற்கொண்ட காவலர்கள் சுவாமிகளை வெருட்டியும் அகலாமல் மலையென நின்றனர். அதைக் கண்ட அந்த ஆட்கள் அவ் வதிகாரியை நோக்கி ஐயா, தேகாபிமானம் சிறிதும் இல்லாதவர், எண்வகை மைதுனத்தை எண்ணிடா தொழித்த யோகி, உலக உணர்ச்சி இல்லாத உத்தமர், இவர் நம் ஏவலில் போகார்! இவரால் நமக்கு எட்டுணை இடரும் இராது என்றனர். இம் மொழிகளைக் கேட்ட அவ் வதிகாரி மிகக் கோபங் கொண்டு வேறு பணியாட்களை ஏவி, தம் முன்னிலையிலேயே விலங்கிட்டுச் சிறையில் அடைத்துப் பூட்டி காவலையும பலமாக்கித் தன் இருப்பிடம் போனான்.

இவ் வாறு சுவாமிகளைச் சிறைப் படுத்திய அம் முகம்மதியன், இரவில் வழக்கம் போல் பள்ளியறைக்குச் சென்ற போது சிறைச் சாலையிலிருந்து 'அணிமா'' என்னும் முதலாவது சித்தியால் அணுவடிவாகி வெளிப் போந்து, எண்ணிய விடத்துச் சென்றடைதல் ஆகிய ''பிராப்தி'' என்னும் ஐந்தாவது சித்தியால் சுவாமிகள் அவ்விடம் எழுந்தரு

ளினார். அதுகண்டு இவன் மனம் நடுக்குற்று உடல் ஆடடங் கொண்டு அம்மம்ம! யான் நேரில் விலங்கிட்டுச் சிறையிலிட்ட இவன் இங்கு வந்திருத்தல் என்னே! இது உலகிலில்லாத விந்தை யன்றோ!! இதை இன்னதென்று உணர்ந்திலனே!!! யாது செய்வேன்? எங்கு போவேன்?! எனப் பலவாறாகப் பரிந்து கூறி ஐயமும் பயமுங் கொண்டு அந்த இரவிலேயே தாம் முன்னர் அடைத்து வைத்த சிறைக் களஞ் சென்று அவ் வறைப் பூட்டையும் காவலையும் நன்கு பார்வை யிட்டான். அவை முன்னுள்ள வாறே இருக்க சுவாமிகள் மட்டும் இல்லாதிருந்தது கண்டு முன்னிலும் மிகத் தளர்ந்தவனாய், அந்தோ! அந்தோ!! பெரியவருக்குப் பிழை செய்தேன், அருந்தவர்க்குத் தீங்கிழைத்தேன்; மெய்ஞ் ஞானிக்கு அஞ்ஞானச் செயலையாற்றினேன்; "ஈசன் அடியார் இதயங் கலங்கிடத் தேசமும் நாடுஞ் சிறப்பும் அழிந்திடும், வாசவன் பீடமும் மாமன்னர் பீடமும், நாசம தாகும் நம் நந்தி ஆணையே!! எனக் கூறிய திருமூலர் வாக்குப்படி நம் கதி என்னவாகுமோ என்றிவ்வண்ணம் பலவாறாகப் புலம்பியவனாய் வீட்டிற்கு வந்து நமது சுவாமிகளின் திருவடிகளில் வீழ்ந்து மன்னிக்குமாறு கெஞ்சிக் கேட்டுக் கொண்டான்.

"குணமென்னுங் குன்றேறி நின்றார் வெகுளி
கணமேயுங் காத்தல் அரிது,"

என்னுந் தமிழ் மறை கூறிய படியையுங் கடந்து, அக் கண நேர வெகுளியையும் அடையாமல் மன்னித்துத் திருவருள் பாலித்தாரெனின் நமது ஸ்ரீ தோபா சுவாமிகளின் அருட்டிறம் வியப்பினும் வியப்பன்றோ!! ?

ஈண்டு "அணிமா", 'பிராப்தி" ஆகிய இரண்டு வித சித்திகளையும், துக்கி களிடத்து இரக்கங் காட்டும் ஜீவன் முத்த குணங்களில் இரண்டாவதான கருணையையும் வெளியாக்கின வாருயிற்று.

இதனால் இவ் வதிகாரிக்குத் தோபா சுவாமிகளிடத்துப் பற்றும், பயமும் அதிகரித்து வந்தன. மக்கள் கூட்டமா யுள்ள சென்னை மாநகரில் இருந்து வருவது ஏனையவர்கள் சுவாமிகளின் பெருமையை அறியாது தீங்கிழைத்துக் கேடெய்துவதற்கு ஏதுவாம். மக்கள் நடமாட்டங் குறைவாயுள்ள சிறு கிராமங்கள் ஏதேனும் ஒன்றில் இருக்கச் செய்தல் சால்புடைய தாகும் என்று எண்ணினான். அன்பர்கள் சிலரிடம் இதனைத் தெரிவித்துக் கேட்டனன். அதற்கு அவர்கள், "எவ்விடத்து இல்லை நல்ல ஞானிகளாம் ஈர்ங்கனி மலர்குளிர் சோலை, அவ்விடங் கானல் மேடதாம் . . . . என்றும்,

"பல்லார் பகைகொளலிற் பத்தடுத்த தீமைத்தே
நல்லார் தொடர்கை விடல்"

எனத் தமிழ் மறை முதலானவற்றுள் கூறியுள்ள மேற் கோள்களை எடுத்துரைத்து மறுத்தனர்.

அதைக் கேட்ட அவ் வதிகாரி யானவன் அன்பர்காள்! நீங்கள் கூறுவதும உண்மையே யாயினும் இப் பெரியாரைக் கண்டு என் மனைவி பெரிதும் பயப் படுகின்றனள். மற்றும எம் ஆங்கில மேலதிகாரிகளுக்கு ஏதாவது இவ்வாறு நேரின் என் மீது பெரிதுங் கோபங் கொள்வர் பெரியார் மனமும் கிலேசம் அடையலாம். ஆதலின், அவ்வாறே செய்தல் யாவர்க்கும் நலன் என்

பாகம் ]

றனன். அவர்களும் உடன்படவே சுவாமிகளிடம் வந்து பணிந்து வணங்கி "எந்தையே! தாங்கள் தயவு செய்து இவ் வண்டியின் மீது எழுந்தருள வேண்டும்'' என்று வேண்ட, யாவும் உணர்ந்த நமது சுவாமிகள் இச் சென்னையில் நம் பணி முற்றுப் பெற்றதெனக் கருத்துடையவராய் அவ் வாறே வண்டியின் மீது எழுந்தருளினர் அங் குள்ள அன்பர் சிலரையும் ஏவலாளரையும் உடன் அனுப்பி வேறிடத்திருக்கச் செய்து, வேண்டும் வசதயையும் செய்து விட்டு வரும்படி ஏவினன்.

அவ் வண்டியை மேற்றிசைச் செலுத்தி இடை வழியிலுள்ள காஞ்சி, வாலாஜாபேட்டை, ஆற்காடு முதலிய இடங்களையும் அவ் வூரின் சிறப்புக்களை யும வசதிகளையும், ஆலயம், மடம். முதலியனவும் பிறவற்றையுந் தெரிவித்துக் கொண்டு வந்தனர். அப் போதெல்லாம் ஒன்றுங் கூருது வந்த சுவாமி கள் வேலூருக்கு வண்டி வந்தவுடன் தாமாகவே திடுமெனக் கீழே குதித்து, "அன்பர்காள்! நீங்கள் போவீர்களாக! எனக்கு இதுவே இனிய ஊர்'' என்றருளினர். அவர்களும திரும்பிச் சென்றனர், அந்த வண்டிச் சாரதி நமது சுவாமிகளின் சிறப் பினை உணர்ந்து வணங்கி அருள்பெற்றுச் சென்றான்.

[ முதலாவது பாகம் முற்றும் ]

உ

சிவமயம்

## இரண்டாவது பாகம்

### நாட்டுச் சிறப்பு

அருள் மிகு ஸ்ரீ தோபா சுவாமிகளின் வேலூர் வாழ்க்கையைப் பற்றி விளக்கு முன் வேலூரைக் கொண்ட தொண்டை நாட்டைப்பற்றியும் வேலூர் நகரைப் பற்றியுஞ் சிறிது ஆராய்வோம்.

ஆற்றல் மிக்க மூ வேந்தர்களால் ஆளப் பெற்ற சேர, சோழ பாண்டிய நாடு என முப்பகுதி களைக் கொண்ட தமிழகத்தில் தொண்டை நாடு என்பது சோழ நாட்டின் ஒரு பிரிவு ஆகும். எவ் வாற்ருல் எனின், நாகப்பட்டினத்தைத் தலை நக ராகக் கொண்டு அரசாண்ட சோழன், நாகலோகம் சென்று அங்கு ஒரு நாக கன்னிகையை மணந்து அவளுடன் சில காலம் வாழ்ந்து மீண்டும் இங்கு வருங்கால் அந் நாக கன்னிகைக்குப் புத்திரன் உதிப்பானேல் அவனுக்குத் தனது சோழ நாட்டில் பாதியைக் கொடுத்து விடுவதாகச் சொல்லி வந்த னன். பின்னர் அவ்வாறே அந் நாக கன்னிகைக்கு ஒரு புதல்வன் பிறந்தான். அப் புதல்வனுக்கு அவள், தன் நாட்டு அடையாளம் தோன்று மாறு ஆதொண்டை இலைகளை உடுத்தி கடலின் மீது தெப்பத்தி லேற்றி அனுப்பினுள். அத் தெப்பம் அலைகளால் அடிக்கப்பட்டு நாகப்பட்டினத் துறையை அடைந்தது; அதில் இருந்த அப் புத்தி ரனைக் கண்ட சோழன் தன் மகனென அடையா ளங்களால் தெரிந்து அன்போடு வளர்த்து தான் முன் கூறிய வாறே சோழ நாட்டின் பாதியைக் கொடுத்து முடி சூட்டி, மன்னன் ஆக்கினுன்.

கடப்பந் தழையால் கிடத்தியவனை கடம்பன் என்றும், வேப்பந் தழையானும் அதன் மலரானும் தொடுத்த மாலையை அணிந்தவனை வேம்பன் என்றும் வழங்குவது போல, ஆதொண்டைத் தழைகளை அணிந்து வந்தவன் ஆதலால் அவனுக்குத் தொண்டைமான் எனப் பெயராயிற்று. அவன் நாட்டிற்குத் தொண்டை நாடு எனப் பெயர் வழங்கப் பெறுகின்றது.

"மேற்குப் பவளமலை வேங்கடம் நேர்வடக்காம்
ஆர்க்கும் உவரி யணிகிழக்கு - பார்க்குளுயர்
தெற்குப் பினுகி திகழிருப தின்காதம்
நற்றொண்டை நாடெனவே நாட்டு"

எனக் கம்பர் இதன் எல்லைகளைக் கூறியுள்ளார்.

இத் தொண்டை நாடு: மலைமகள் இறைவனைத் தனக்குக் கணவனாகத் தழுவிக்கொள்ளுதற் பொருட்டுக் காஞ்சீபுரத்தில் தவஞ் செய்யப் பெற்றதும், பாடல் பெற்ற திருவலம் முதலான முப்பத்திரண்டு அரும் பெருஞ் சிவத் தலங்களையுடையதும், திருப்புகழ் பெற்ற திருத்தணிகை முதலான ஸ்ரீ முருகக் கடவுள் க்ஷேத்திரங்களுடையதும், விஷ்ணுவின் நூற்றெட்டுத் திருப்பதிகளில் சில திருப்பதிகளையுடையதும்; வாலி, காக்கை, அணில் என்பவைகள் பூசித்து முத்தி பெற்ற திருக் குரங்கணின் முட்டம் என்னுந் தலத்தை யுடையதுமாகும்.

மற்றும், இத் தொண்டை நாடு: கண்ணப்பர் திருக்குறிப்புத் தொண்டர், ஐயடிகள் காடவர் கோன், கலியர், வாயிலார், சாக்கியர், மூர்க்கர், பூசலார், முதலிய நாயன்மார்கள் தோன்றி நலம்

பெறச்செய்ததும். திருவள்ளுவ தேவர், கச்சியப்ப சிவாச்சாரியார், இராமானுஜர், குகனேரியப்ப நாவலர், கம்பர், பரிமேலழகர், ஒட்டக்கூத்தர், சேக்கிழார், இரட்டைப் புலவர் அப்பைய தீட்சிதர், முதலான சான்ஞேர்கள் தோன்றியதால் 'தொண்டை நாடு சான்ஞேர் உடைத்து எனப் பெயர் பெற்றதும்; அதிகமான், கருப்பன், சடையப்பன், முதலான வள்ளல்களால் மிகச் சிறப்புற்றதும், நீதி தவருத பல மன்னர்களால் அரசு புரியப் பெற்றதுமாம்.

அஃதன்றியும் முன்ஞெருகால் பரமசிவஞலிடப் பெற்ற சாபம் நீங்குதற் பொருட்டு கல்லுருவாய்க் கிடந்த விஷ்ணுவை நோக்கி நந்தி தவம் புரிந்ததால் நந்தி மலே என்று வழங்கப்பெறும் நந்தி துர்க்கத்தில், வசிட்ட முனிவரின் காமதேனு பரமசிவஞர் வாகன மான இடபத்தைக் கண்டு விழைவுற்றுப் பால் வற்றியதைக் கண்ட வசிட்டர், ஒரு தருப்பையை எடுத்து கன்ருக்கி அனுப்ப, காமதேனு அதைக் கண்டு பாலேப் பொழிந்து, அப்பால் திரண்டு ஒரு நதியாய்ப் பெருகியது கொண்டு, பாலாறு எனப்படும் பாலிநதி பாய்ந்து பல் வளங்களேப் பெற்றதுமாம் இத்தொண்டை நாடு! இதை,

''வாலிதாகிய குணத்தினன் வசிட்டனென் றுரைக்குஞ்
சீலமாமுனி படைத்தோர் தேனுவின் தீம்பால்
சாலநீடியே தொல்லேநாட் படர்ந்திரு தன்மைப்
பாலிமாநதிப் பெருமையான் பகர்வதற் கெளிதோ''

என்னுங் கந்த புராணச் செய்யுளாலும்; "அன்ன தன்மை வசிட்டன் அறிந்து தருப்பையை" என்றற்ருெடக்கத்துக் காஞ்சி புராணச் செய்யுளாலும் பிறவற்ருனும் உணர்க.

பாகம்]

முன்பொரு கால் பத்தினி ஆற்றின் தென்கரையிலுள்ள பீஜா ஜலத்தில் (பள்ளிகொண்டையில்) ஸ்ரீமந் நாராயணனைக் குறித்து அம்பரீசர் தவஞ் புரிந்து வேள்வியுஞ் செய்ய. அதை முன்னிட்டு பத்தினி நதி பாலைப் பொழிந்தது அப் பால் வேள்விக் குதவியாயிற்று ஆதலின், பாலாறு என்னுந் திருநாமம் கொண்டதென்பர் வைணவர்.

இவ் வாற்ருல் தொண்டை நாட்டின் தோற்றமும் சிறப்புங் கூறியவாருயிற்று.

## நகரச் சிறப்பு

முன்னர்க் கூறிய பெருமைகள் மலிந்த தொண்டை நாட்டின் கண் தென்கயிலை என்னும் ஒரு மலையின் அடிவாரத்தில் கைலாய பட்டினம் என்னும் நகரைத் தலைநகராகக் கொண்டு சிறப்புற முன் ஒரு காலத்தில் கரிகாற் சோழன் ஆண்டு வந்தான். இவன், நந்தி மலையிலிருந்து உற்பத்தியாகிக் கிழக்காய் ஓடிவரும் பாலாற்றங் கரையில் வேலப்பாடி என்னும் ஊரின் வடபாகத்தில் அநேக இருடிகள் தவஞ் செய்து கொண்டிருந்ததும், வேல மரங்கள் அடர்ந்து இருந்தது மான அக் காட்டை வேரற அழித்து அங்கு ஓர் அழகிய பட்டிணத்தை உண்டாக்கினன். இது வேலூர் எனப் பெயர் பெற்றது.

இக் கரிகாற் சோழன் பால் பத்ராசலத்திலிருந்து (தெலுங்கு நாட்டிலிருந்து) வந்தவர்களும், இவன் ஆணைப்படி ஆரணி மன்னர் படையை வெற்றி கொண்டவர்களுமான பொம்மைய ரெட்டி, திம்மைய ரெட்டி என்னும் இவ் விருவர் ஆவர்.

இவர்கள் பால் அரசன் அன்பு கொண்டு அவ் வேலூருக்கு மன்னர்களாக்கினுன். இவர்களும் சிவ பக்தர்களாய் நீதி தவருமல் அரசாண்டு வந்தார்கள்.

ஒரு நாள் பொம்மைய ரெட்டியார் தனது காராம் பசுவானது வேல மரங்கள் அடர்ந்த ஒரு புதருக்குட் சென்று அங்கு உள்ள புற்றின் மீது நாடோறும் தன்னுடைய பாலைச் சுரந்து விடவும் அதை ஐந்து தலை நாகம் ஒன்று அருந்தவுங் கண்டனர். இதன் மர்மம் புரியாது அன்றிரவு துயில் கொண்டார். இறைவன் கனவில் தோன்றி "அன்ப! யாம் நாக வடிவாய் ஆவின் பாலை அருந்துகின்ரேம். இங்கு எமக்கொரு ஆலயத்தை அமைத்து வைப்பாயாக" எனத் திருவாய் மலர்ந் தருளினுர். அக் கோவில் கட்டு மளவிற்கு நிதிப் புதையல் இருக்கு மிடத்தையுங் காட்டி அருளினுர்.

அவ்வாறே பொம்மைய ரெட்டியார் இவ் வேலூரில், கோட்டை, ஆலயம், மதில்கள் முதலானவற்றை மிகச் சிறந்த சிற்பங்கள் அமையுமாறு செய்வித்து இறைவன் ஆணைப்படியே (ஜ்வர கண்டீசர்) சலகண்டீசர் என்னும் பெயருடன் ஒரு சிவலிங்கப் பிரதிட்டையும் செய்து கும்பாபிஷேகம் நடாத்தி சிறப்புற நித்திய நைமித்தியப் பூசைகளையுஞ் செய்து வந்தார்.

பின், வேலமாநகரை பெனு கோட்டைப் பிரபு தேவமகா ராயரின் புத்திரர் வேங்கட தேவ மகா ராயரும், அவரது மரபினர் ஒன்பது பேர்களும், அதன் பிறகு கிருஷ்ண தேவராயரும், பின்னர் கானுகான் என்னும் முகம்மதியனும், இன்னும் துக்

பாகம்]

கோசிராவ், சங்கோசி ராவ், சீனிவாச ராவ், இராம ராவ் என்பவர்களும் ஆண்டு வந்தனர். மற்றும் டில்லியி லிருந்த தாவுத்கானும், அவன் மந்திரி சாதுல்லாகானும், ஆண்டு வந்தார்கள். இவர்களே ஆறு காடுகளை வெட்டித் திருத்தி ஆற்காடு என்னும் ஊரை உண்டாக்கினவர்கள். பிறகு. வேலூர் ஆங்கிலேயர் வசமாயிற்று

இவ் வாற்ருல் வேல மரக் காட்டை வெட்டிச் சீர் திருத்தியதால் வேலூர் எனப் பெயர் பெற்றதும், அதன் வரலாறும் சிறிது ஆராயப்பெற்றது.

"திறல்வேல் நூதியிற் பூத்த கேணி
விறல்கொள் வென்றி வேலூர்'' எனவும்,

"அந்தண் கிடங்கினவன் ஆமூர் எய்தின்'' எனவரும் சிறுபாணாற்றுப் படையின் பாட்டுக்களால் வேலூர் என்பதற்கு மற்ருெரு காரணமும் உண்டு; அது வருமாறு:—

இத்தொண்டை நாட்டிலுள்ள இருபத்து நான்கு கோட்டங்களுக்குள் மூன்று கோட்டங்களை ஆமூர். எயிற் பட்டினம் என்னும் ஊர்களைத் தலைநகரங்களாகக் கொண்டு முன்ருெரு காலத்தில் ஓய் மாநாட்டு நல்லியக்கோடன் என்னும் மன்னன் அரசாண்டு வந்தான்.

இந்த நல்லியக் கோடன் பகைவர்க் கஞ்சி முருகக் கடவுளை அகக் கமலத் திருத்தி வேண்டிக் கொள்ள, அருளுருவாகிய ஸ்ரீ வேல் முருகனும் அவனது கனவிற் ருேன்றி, "அன்ப நீ இக் கேணியிலுள்ள பூக்களைக் கொண்டு பகைவரை ஒழிப்பாயாக'', என்று அருள் செய்தனர். துயிலினின்றும்

விழித்து அங்குச் சென்று பார்க்க, கேணியிலுள்ள பூக்கள் அனைத்தும் வேற்படைகளா யிருந்தன !! அவற்றைக் கொண்டு ஸ்ரீ முருகப் பிரான் கிருபையால் பகைவரை வென்ருன். இங் நிகழ்ச்சிகள் நடந்த இடமான காரணத்தால் வேலூர் எனப் பெயர் பெற்றது.

வேலூரின் ஒரு பகுதியாகிய அறுகந்தன் பூண்டி முருகன் மேல் ஸ்ரீ அருணகிரியார் திருப்புகழ் பாடியிருப்பதால் இவ் வேலூர் திருப்புகழ் பாடல் பெற்ற ஸ்தலமும் ஆகும்.

## வேலூரில் முதல் திருவிளையாடல்

இவ் வண்ணஞ் சிறப்புற்றிலங்கும் வேலூரில் நம்முடைய ஸ்ரீ தோபா சுவாமிகள் திடுமென இறங்கி, சைதாப் பேட்டையிலுள்ள ஒரு முகம்மதியன் வீட்டிற்குள் புகுந்தார்கள். கோவணங் கூட இல்லாத குழந்தையைப் போல் நுழைந்தவரை அங்கிருந்த துருக்கர்கள் ஒன்றுகூடிக கடுஞ்சினங் கொண்டவர்களாய் இழிவான பல சொற்களைக் கூறிக் கொண்டு தடி முதலிய ஆயுதங்களால் இரக்கமின்றித் தாக்கினர். சிலர் கைகளால் அடித்தனர். பலர் அடிப்பதற்கு ஓடி வந்தனர். இப்படியாக ஆட்டுக் கூட்டம் புலியைத் தாக்க வந்தது போல் கூடினர். "சிவ ஞானிகள் துன்பைப் புலித்தோலை யணிந்த சிவனே நீக்குவார்" என்பது பொய்க்குமோ"! அன்று மதுரையிலே பாண்டியன் சிவபெருமானை அடித்த அடி திரும்பி பாண்டியன் முதலான மூவுலகத்தவர் மேல் பட்டதுபோல் இக் கயவர்கள் சுவாமிகளைத் தாக்கின தாக்குதல்

பாகம் ]

அனைத்தையும் சிறிய உருவத்தில் மிகுந்த உறுதி (கண) நிலை எனும் 'கரிமா' சித்தியை வெளிப்படுத்தி திரும்பி அவர்களையே தாக்குமாறு செய்தார்கள்! சுவாமிகளுக்குச் சிறிதுந் துன்பமில்லை! இந்த அதிசய நிகழ்வைக்கண்ட அவர்கள் அஞ்சி அலறினர். இவர் யாரோ ஒரு பெரிய தவ வலியுடைய சித்த புருஷர் எனத் தெளிந்தனர். சித்த புருஷரின் திருவடிகளில் வீழ்ந்து வணங்கி வாழ்த்தி யாங்கள், அறியாமையிற் செய்த பிழையைப் பொறுத்தருள வேண்டும் என்று பலவாருக வேண்டிக் கொண்டனர். சுவாமிகளும் பொறுத்தருள் பாலித்தார்கள். இவர்கள் நமது சுவாமிகளைக் குருவாய் எண்ணிக் கொண்டாடியிருந்து உய்வு பெற்றனர்.

இவ்வாறு முதன் முதலில் வேலைமாநகரில் 'கரிமா' என்னும் மூன்ருவது சித்தியை வெளிப்படுத்தி, துட்டர்களை நிக்கிரகம் செய்து ஆட்கொண்டவாருயிற்று.

இந் நிகழ்ச்சி காட்டுத் தீப் போல் வேலூரெங்கும் பரவியது. பலர் சுவாமிகளை வணங்கிப் போற்றுவர், சிலர் தூற்றுவர். ஆயினும்,

"வையினும் வாழ்த்தினும் மலர்கொடு ஏத்தினும்
வெய்ய வராவிடை வீழ நூக்கினும்
எய்யினும் எறியுனும் இயாது செய்யினும்
நைவொடு மகிழ்வில ஞானி சீலமே,"

என்று தம் ஞான வொழுக்கத்திலேயே நின்றவராய்த் தமக்கென ஓரிடமுங் கொள்ளாது எங்கு வேண்டுமானுலுஞ் சென்று வருவார். சென்ற அங்கேயே சில போழ்து தங்கியும் விடுவார். ஆங்கிலப் படை வீரர்கள் தங்கும் அரணுக் குள்ளுஞ்

சென்று வருவார். அவரை யாரும் தடைசெய்ய மாட்டார்கள். கடைவீதிக்குச் சென்று ஏதேனும் ஒரு கடை முன்பு நின்று தம் கண்களால் நோக்கு வாராயின் அன்று அந்தக் கடைப் பொருள்களெல்லாம் நல்ல கிராக்கியுடன் விற்பனை ஆகிவிடும். கடையிலுள்ள சாமான் எதையாவது தொட்டாலும், அவ்விதமே விலையாகிவிடும். சிலரோ, "எங்ஙையார், எமது கடையைத் தமது திருக் கண்களால் நோக்கிலர்; அந்தோ ! யாம் முற் பிறப்பில் என்ன பாவம் செய்தோமோ" என்பர். மற்றும் பலர் பலவாறு கூறுவர்.

## கட்ட முயன்ற துட்டர்கள் பட்டபாடு

இவ் வண்ணம் இப் பெரியார் சிவஞானந் தெளிந்த சித்தராய் அருள் விளையாட்டுகளைச் செய்துகொண்டு இருக்குங்கால், அங்குள்ள சில துட்டர்களும், கெட்டவர்களும் கூடி, நமது சுவாமிகளை ஒரு கயிற்றுற் கட்டி வழியில் இழுத்து எறிந்து விடலாம் எனத் திட்ட மிட்டவர்களாய்க் கூடி வந்து சுவாமிகளைப் பற்றிய போது; பாதரசத்தைக் கையில் எடுக்கவோ கயிற்றிற்கட்டவோ முடியாதது போல; பெரிய உருவத்தில் ∴ கனமிலா நிலையுடைய 'இலகிமா' என்னும் நான்காவது சித்தியை வெளிப்படுத்தவே, பற்ற முடியாது திகைப்பவர்களாயினர்.

---

∴ நெருக்கமாக ஒட்டியிருத்த லின்றிய நிலை (பாதரசம் போல)

பாகம்]

"எட்டுத் திசையும் பதினறு கோணமும் எங்கும் ஒன்ருய்
முட்டித் ததும்பி முளைத்தோங்கு சோதியை மூடர் எல்லாங்
கட்டிச் சுருட்டித் தங்கக் கத்தில் வைக்க .... .... ....,"

நினைத்தது போன்று செய்ய முற்படின் முடியுங் கொல்லோ?!

தாங் கருதியவாறு செய்ய இயலாது போகவே நாணமும் மிகச் சினமுமுடையராய்ச் சுவாமிகளை விடம் ஊட்டியேனுங் கொல்வதென முடிவு செய்து கொண்டு விடங் கலந்த சிற்றுண்டியை எடுத்து வந்து கொடுத்தனர். அன்பு பாராட்டிக் கொடுத்த நய வஞ்சகர்தஞ் செயல் சுவாமிகட்குத் தெரிந் திருந்துந் தெரியாதவர் போல், பாற்கடலைக் கடந்த காலத்து வாசுகி கக்கிய ஆலத்தைத் தெரிந்தே அருந்திய ஸ்ரீ நீலகண்டன் போலத்; தாமும் உண்ட தோடு நில கண்டத்தின் கசிவை நந்தியெம்பெரு மான் நக்கியது போல; தமது நாய்களும் நக்கி அருந்தும் படிச் செய்தனர். சிவ பெருமானுக்கும் நந்தி தேவருக்கும் நஞ்சு அமுதானது போன்று நமது மகானுக்கும் நாய்களுககும் நலமே செய்த தன்றி ஊனம் ஒன்றும் உண்டாக்கவில்லை இப் படிப் பாற்கடல் கடைந்த காலந் தொடங்கி பிரளய காலம் வரைக்கும் மகான்களுக்கு இவ்வாறு பல காரணங்களால் நிகழ்வன ஆம் என உணர்ந்த தாலன்ரே.

"பெயக்கண்டு நஞ்சுண் டமைவர் நயத்தக்க
நாகரிகம் வேண்டு பவர்"

எனத் திருவள்ளுவப் பெருந்தகை எடுத்தியம்பி னர்!. ஆனல். இவ்விதந் தீங்கு புரிந்த வருட்

பலரும் அன்றிரவே வாந்திபேதி கண்டு இறந்தொழிந்தனர்.

''மிகமே வியபுண் ணியபா வமெனும்
வினையின் பயன்மே லொருகா லமுருது
இகமே வருமென் பதனுல் உளநோய்
எல்லாம இவனைச் செறளய் தினவே'',

என்ற வேத வாக்குப்படி மிகப் பாவியான சசிவண்ணன் எய்தியது போல்; எஞ்சியுள்ள வருட் சிலர் குட்டம் முதலான பெரும் வியாதிகளை யுற்றவர்களாய்த் துன்புற்று ஒழிந்தனர்.

சிலர், பெரியாரைப் பிழைத்தமையால் தமக்கு இத் துன்பம் எய்தியதென்று அச்சங்கொண்டு விவேக முடையவர்களாய் சுவாமிகளின் திருவடிகளில் வீழ்ந்து வணங்கி குறையிரந்த அளவில் அருள் பெற்றவர்களாய் நலம்பெற்று வாழ்வாராயினர்.

''சிறியவர் இகழ்ந்து ஞானி செய்தபா வத்தைக் கொள்வர்
அறிவுளோர் அறிந்து பூசித்து அறமெலாங் கைக்கொள் வாரே.''

என்று ஞானியின் ஆகாமிய (வரத்து) கருமம் நீங்கும் முறைமையைக் கைவல்லிய நவநீதம் கூறியபடி நடந்த வாருயிற்று

## முடம் நீக்கின விநோதம்

பின்னொரு நாள் முடமான குழந்தை ஒன்றைப் பெற்றோர்கள் சுவாமிகள்பால் கொண்டு வந்து ''சுவாமி, தேவரீரின் திருவருட் பேற்றால் புத்திரப் பேறு கிடைத்தும்! இக்குழந்தை முடமாகி யிருக்

கிறது இதனைப் போக்கி அருள வேண்டும்'' என்று வேண்டிக் கொள்ள, நமது சித்த புருஷர் நாய்களை நோக்கினர், அந் நாய் அடியார்களும் அகத்திய மா முனிவரிடமிருந்த நாய் கவி பாடிய அற்புதம் போல அக் குழந்தையை நக்கின, அதனால் குழந்தையும் முடம் நீங்கி நலமடைந்து நடக்கும் ஆற்றல் பெற்ற அற்புதம் நடந்தது! அதனைக் கண்ட தாய் தந்தையர்கள், அளவிலா மகிழ்ச்சி யுடன் சுவாமிகளின் ஆசி பெற்று மாசில் குழந்தை யுடன் தமதிடஞ் சென்றனர்.

## தீர்க்கதரிசி தோபா சுவாமிகள்

இறைவனுக்குச் செய்த பணி வழுக்கினும் வழுக்கும் சிவ ஞானிக்குச் செய்த வழிபாடு வாளா ஒழியாது. என்னும் உறுதியுடைய ஒரு அன்பன், நமது அஷ்டா மா சித்தர் பால் நாடோறுந் தவறாது வந்து தெரிசித்து வணங்கி நியமத்துடன் வழிபட்டு வந்தான். ஒருநாள் சுவாமிகள் அவனைப் பார்த்துத் திருவருள் நோக்கஞ் செய்து 'நாளைக் காகும்,'' என்று திருவாய் மலர்ந்தருளிச் செய்த னர். அவன் ஆங்கிலக் கல்வி கற்று அரசாங்கத் தில் பெரிய உத்தியோகம் பார்த்து ஒரு வருட காலமாக அப் பதவியை இழந்து வருந்திக் கொண் டிருந்தவனாதலால்; சுவாமிகளது திருவாக்கு அவ னுக்கு மிகக் களிப்பை உண்டாக்கிற்று. மகிழ்ச்சி யோடு தமதில்லஞ் சென்று மனையாளிடம் இதைக் கூறி "இனி அவ் வேலை கிடைக்குமாயின் இரண்டு திங்கள் ஊதியத்தைச் சுவாமிகளுக்குக் காணிக் கையாகச் சமாப்பிப்பேன்''. என்று கூறி நம்பிக் கையோடிருந்தான். ஸ்ரீ சுந்தரமூர்த்தி நாயனாரைத்

தடுத்தாட் கொள்ள ஓலை வந்ததுபோல் மறு தினமே அரசாங்க உத்திரவு ஓலை வந்தது, மகிழ்ந்து அவனும் உத்தியோகத்தை ஏற்று அதனால் வந்த பொருளில் ஆயிரம் வெண் பொற்காசுக்களைக் கொண்டு இம் மகானின் திருவடிகளில் அர்ச்சித்து வணங்கிச் சமர்ப்பித்த தன்றி அப் பொருளைக் கொண்டே, சுவாமிகள் வேலூரில் முதற்கண் வந்து இறங்கியவுடன் எந்த முகம்மதியன் வீட்டில் புகுந்தனரோ; அதே வீட்டை விலைக்கு வாங்கி பழுது பார்த்து அதற்கண் தோபா சுவாமிகள் இருந்து அருள் புரியும் ஆசிரம மாக்கிக் கொடுத்தான். சுவாமிகளும் அவ் வில்லத்தில் எழுந்தருளி யிருந்தனர். அன்பர் பலரும் அவ் வாசிரமத்திற்கு வந்து சுவாமிகளைத் தரிசித்து அருள் பெறலாயினர்.

வேலூரில் தாம் நிரந்தரமாக இருந்து அருள் புரியும் இடம் இது தான் என முன்னமே உணர்ந்த அதனாலன்றோ வண்டியை விட்டு இறங்கியவுடன் முன்பின் ஒன்றையும் பாராமல் அம முகம்மதியன் வீட்டில் புகுந்தனர்!? இதனால் சுவாமிகளது தீர்க்க தரிசனம் (எதிர் காலமும் முன்னே தெரிந்து இயற்றல்) வெளியான வாறாயிற்று.

## சித்த நாதர் சீடர் ஆதல்

இவ் வண்ணந் தோபா சுவாமிகள் ஞானமும் சித்தியும் உடையவராய், ஸ்ரீ திருஞான சம்பந்தப் பெருமானான தங் குரு வருளால் ∵ அட்டமா சித்தி

∵ (1) *அணிமா* (2) *மகிமா* (3) *கரிமா* (4) *இலகிமா* (5) *பிராப்தி* (6) *பிராகாமியம்* (7) *ஈசத்வம்* (8) *வசித்வம்*, *ஆகிய எட்டு பெரிய சித்துக்களாம்.*

பாகம் ]

யும், பர சம் வேத்யமும், (உலகெலாம் உணரும் ஞானி, யென்பதும்) பெற்றவராய், பேரானந்தப் பெருவெள்ளத்தில் திளைப்பவராய், தூல திருட்டிக்குப் பித்தரைப் போன்றவராய், வேலை மா நகரில் அருள் புரிந்து வருங்கால், குடும்ப வாழ்க்கையில் துன்பமே யனறி இன்பமே யில்லை என்றும்; இன்பம் இருக்கிறதே என்ருலும அது விஷங் கலந்த பாலைப் போல துன்பங் கலந்த இன்பமாகும்! அது தள்ள த் தக்கதே யன்றி கொள்ளத்தக்கதன்று என அனுபவத்திற் கண்டு நன்ருக விசாரித்துத் துறந்து வீட்டின்பத்தின் (துக்கக் கலப்பிலாப் பேரின்பத்தின்) பொருட்டு சுரோத்திரீய பிரம்ம நிட்டையுடைய குருமூர்த்தியைத் தேடி அலைபவரும்; அனந்தங் கோடி சன்மங்களில செய்த நிஷ்காம கருமத்திஞல் மனத் தூய்மை (இராகத் துவேஷாதி இல்லாமை) யும், நிஷ்காம உபாசனையால் மனச் சஞ்சலமும் (அது, இது வேண்டும் எனுங் கவலையும்) இன்றியவராய்; சொரூப (தனது வடிவ) மறைப்பை மாத்திரமுடையவரும்; விவேக, வைராக்கிய, சமாதி சட்கத்துவம், முமூட்சுத்வம் ஆகிய சாதன சதுட்டயமும் உடைய தீவிர அதிகாரியுமான சித்தநாதர் என்னும் புண்ணிய சீலர், நமது மகிமை மிகு மகான் ஸ்ரீ தோபா சுவாமிகளைச் சரண் அடைந்து குருவாகக் கொண்டு உபதேசம் பெற்று; ஆத்தம், அங்கம், தானம், சத்பாவம் ஆகிய சதுர்வித பணிவிடைகளை ஆற்றி வந்தார். தேசிகனை ஆவி, பொருள், ஆக்கையாலே தினந் தினமும் பூசிக்கும் மாணவராகவும், குரவனே குறி ஏதுமிலாச் சிவமாகக் கருதும் சத்பாவ முடையவராகவும் பணிவிடைகளை ஆற்றி குருவருள் பெற்று விளங்குவராயினர்.

## சமாதி நிலையம் கட்ட முயற்சி

நமது சுவாமிகளின் திருமேனி ஏனையோரின் மல உடல் போன்றதன்று சிவம் உறையும் திருக்கோவிலாம். ஆதலின், இதை உலக மக்கள் என்றென்றும் வழிபட்டு நலம் பெறும் பொருட்டுச் சமாதி நிலையத்தில் அடக்கி அதன் மேல் சிவலிங்கம் நிறுவி ஜீவ சமாதி யாக்கிப் பூசை செய்வித்தல் வேண்டும் என்று மனத்துட் கருதினர்.

*"அந்தமில் ஞானி அருளை அடைந்தக் கால்*
*அந்த உடல்தான் குகைசெய்து இருத்திடில்*
*சுந்தர மன்னரும் தொல்புவி உள்ளோரும்*
*அந்தமில் இன்ப அருள்பெறு வாரே" எனத் திருமூலரும்,*

"சரீரம் பஞ்சதத் வாக்யம் தத்வம் தத்வேன யோஜயேத்
தத்ராயி ப்ருதிவீ தத்வே யோஜனம் மோக்ஷ சாதனம்",

என ஆகமமும் முதலிய பிரமாணங்களும் இருப்பது கொண்டுந் தம்முடைய கருத்தைத் திடப்படுத்தி தானப் பணி விடையைத் தீவிரமாகச் செய்ய முற்பட்டார்.

## சித்த நாதர் செல்வம் ஈட்டல்

தாங் கருதிய படி முடிக்கப் பொருள் இன்றி ஆகாதென எண்ணியவராய் பல இடங்களுக்குச் சென்று பொருளை யாசித்தனர். அன்புடன் நல்கினர் சிலர், "ஏற்பது இகழ்ச்சி யன்றோ" என வம்பு பேசி இகழ்ந்தனர் சிலர், அதனுல் மனம் வருந்தின

ரேனும், குரு பக்தியின் மிகுதியினாலும், தனக்கன்றி பொருளீட்டலும், நல்வழியில் செலவு செய்தலும, காத்தலும, குருவின் பொருட்டுச் செய்யுந் தானப் பணிவிடை யானதினாலும் "கீர்த்தியும் நிந்தையும்" சமமெனக் கருதும் மனப் பயிற்சிக்கு இது ஒரு வாய்ப்பாகு மெனக் கருதி முன்னிலுந் தீவிரமாகப் பொருளீட்டுவதில் முனைவாராயினர்.

இவ் வண்ணம் பல இடங்களிலும் நன் கொடைகளாக வசூல் செய்து கொண்டு காஞ்சீபுரஞ் சென்றார். அங்குள்ள வைணவச் செல்வர் ஒருவர் விட்டிலுஞ் சென்று திருப்பணிக்குப் பொருளுதவுமாறு கேட்டபோது, அவர் தீவிர வைணவர் ஆதலால் மத வேறுபாடு நினைந்து கோபங் கொண்டு தகாத வார்த்தைகளால் வைது இவரை வீட்டிலிருந்து பிடித்து வெளியில் தள்ளி விட்டார். இவையனைத்தையும வேலூரின் கண் எழுந்தருளியிருந்த வித்தகராய ஸ்ரீ தோபா சுவாமிகள் ஞானக் கண்ணால் உணர்ந்து தமதருகில் அமர்ந்திருந்த அன்பர்கட்கும் இவ் விபரத்தை எடுத்துக் கூறி "அஞ்ஞானத் தழுந்தியவன் செய்கை இது" என்றுரைத்துப் புன்னகை கொண்டிருந்தார்கள்.

வேலூரில் தோபா சுவாமிகள் இவ்வாறிருக்கும் அளவில் காஞ்சியிலுள்ள அவ் வைணவருக்குச் சுர நோயுண்டாகி அளவற்ற துன்பந் தந்தது! அதனால் வருந்திய வைணவர்; மணிமந்திர மருந்துகளினால் நீங்காது வருத்தி வரவே தாங்க முடியாத பெருந்துன்பம் எய்தி வருந்தினர். ஒன்றும் செய்து கொள்ள முடியாது வருந்திய வைணவருக்கு மருத்துவஞ் செய்ய வந்த வைத்தியர் நாடியைப்

பார்த்து பூத நாடி சலிப்பது கண்டு "ஐய, நீர் இதைச் சுர நோய் என்று கருத வேண்டாம். பெரியார் சாபப் பயன்" எனக் கூறிச் சென்றார்.

அதைக் கேட்ட வைணவர் தன்னிடத்து வந்த சித்த நாத சுவாமிகளைத் துன்புறுத்தியதனால் வந்தவினையாகுமென் றுணர்ந்தார். பலவிடத்துந் தேடி அவரைக் கண்டு திருவடிகளில் வீழ்ந்து சுவாமின்

"வருணம் நெறிசார் மதத்து அம் மதம்மெய்ப்
பொருள் உணர் வூடுஇறும் உந்தீபற
பொன்றாதது ஒன்றேயென் றுந்தீபற"

என்னும் அவிரோத (விரோதமில்லாத) உந்தியார் வாக்கை யுணராது விரோதம் வைத்துப் பேசினதை மனத்துட் கொள்ளாது பொறுத்துத் திருவருள் புரிய வேண்டுமெனக் குறையிருந்தார் தாம் நோயால் துன்புறுவதை உணர்த்தினர். சித்த நாதரும் குருபிரான் திருவிளையாடல் எனக் கருதி தோபா, தோபா, தோபா. தோபா, தோபா !! என ஐந்துமுறை ஓதி திருநீறு அளித்தனர். அதனை வாங்கி சிரத்தா பக்தியுடன் அணிந்து உட்கொண்டார் அன்று மதுரையில் கூன் பாண்டியனுக்குத் திருநீற்றை ஸ்ரீ திருஞான சம்பந்தர் கொடுக்க வெப்பு நோய் நீங்கியவாறு; இவ் வீர வைணவருக்கும் வெப்பு நோய் நீங்கியது! துன்பம் இன்றி இன்பம் எய்தினர்.

இவ் வாறு, சுரநோய் நீங்கப் பெற்ற அவ் வைணவர் உடனே வேலை மா நகரை யடைந்து

பாகம் ]

நமது மகானைக் கண்டு பணிந்து அப்போது தாம் உடல் நோய் நீங்க அருள்பெற்றதோடு; இப் போது பவப் பிணியும் நீங்க அருளைப் பெற்றுக் கொண்டு, சுவாமிகளின் சமாதி நிலையம் கட்டு வதற்கு வேண்டிய பொருளையும் உதவி, சுவர் எடுத்தன் முதலான வற்றையும் உடனிருந்து செய்தனர்.

முன்பு ஆங்கிலம் படித்த உத்தியோகத்தன் மூலமாகத் தமக்கொரு ஆசிரமம் அமைத்துக் கொண்டது அறக் கருணையும்; பின்பு இவ் வைண வர் மூலம் சமாதி நிலையம் ஆக்கிக் கொண்டது மறக் கருணையும் ஆகும். இப்படி அருள்பாலிக் கும் மகிமைமிகு ஸ்ரீ தோபா சுவாமிகள், தமது சீடரால் அமைக்கப் பெற்ற அக் குகைக்குள் இறங்கி இனிது பார்வை யிட்டு, "மகனே! இது என்ன எலி நுழையும் வளை போன்றுள்ளதே"! என்றனர். அதைக் கேட்ட சித்த நாதர் உடனே அக் குகையை மாற்றி,

"நவமிகு சாணிலே நல்லாழஞ் செய்து,
குவைமிகு சூழவைஞ் சாணகக் கோட்டி,
தவமிகு குகைமுக் கோணமுச் சாணுக்கிப்,
பவமறு நற்குகை பத்மா சனமே."

என்னுந் திருமந்திரத்தால் விதித்த முறைப்படி நன்கமைத்தார். சுவாமிகள் வந்து குகையில் இறங்கி நாற்புறமும் நன்கு பார்த்து, சிஷ்ய, இது தான் எம் போன்ரோர் இருக்குங் குகை என்று கூறினார்கள். பிறகு

"அத்தனுர் அமரும் ஆலய மாகும்
அடி யரின் அகங்குளிர் மேனி,
முத்தியா மதனே மூலமாய்த் தொழுதல்
முனிவரும் மன் னுசீர் நாடு,
நத்திஞன் நலமும் நாடுமா பயனும்
நயக்குமென் றெண் ணியே சீடச்,
சித்தநா தனுந்தன் தேசிகன கோவில்
சித்திரத் திறம்படச் செய்தான்,''

எனப்பாடி அவ்விடங் குழுமியிருந்த பக்தர்களுக்குச் சித்த நா தரின் குரு பக்தியை விளக்கிக் காட்டியருளினுர்கள்.

## அதிகாரி ஆணவத்தை அழித்த அற்புதம்

அதன் பிறகு ஒருநாள் ஓரிடத்து நிருவிகல்ப சமா தியில் நிலை பெற்றிருந்தார் அன்ருெரு நாள் நிட்டை கூடியிருந்த துறவு வேந்தர் பட்டினததடிகளைத் திருடர்களுக்குத் தலைவன் எனத் தீர்மானித்த பத்ரகிரிராஜன் ஆட்களைப் போல்; சென்னை வாழ் அதிகாரி ஒருவன் தீர்மானித்து சாட்டையால் அடித்து அதட்டிப் பார்த்தான் சுவா மிகள் நிலை கலையா திருக்கவே அவன் ஒன் றும் புரியாமல் சென்னைக்குச் சென்று விட்டான். இவன் சென்ற அன்றைய தினம் கருவுற்றிருந்த இவனது மனைவி அழகிய ஆண் மகவை ஈந்தாள். அக் குழந்தைக்கு வலது கையிலும் முதுகிலும சாட்டை அடித் தழும புகள் இருப்பது நன்கு தென்பட்டன! அதன் வலியால் குழந்தையின் அழுகையோ அதிக மாகியது? அப்போது அவன் ஐயனை வேலூரில் அடித்த அடியின் தழும்புகள் இக் குழந்தையிற் காணப்படுகின் றனவே இஃதென்ன விந்தை! என வியப்புற்ற

பாகம்]

வனாய்க் குழந்தையும் மனைவியுமாக வேலூருக்கு வந்து சுவாமிகளின் திருவடிகளில் குழந்தையை வைத்து, வீழ்ந்து வணங்கி மன்னிக்குமாறு வேண்டி நின்றனன். அதிகாரியின் ஆணவம் அழிந்ததைக் கண்ட நமது சித்தமகான் ஸ்ரீ தோபா சுவாமிகள், தமதிடத் துண்டான அடித் தழும்பு கள் இல்லாததே போல் அக் குழந்தை யினிடத்து மிலாதவாறு அருள் நோக்கஞ் செய்து போக்கி னார்கள். அழுத குழந்தை சிரித்தது! அதனை கண்ட தாய் தந்தையர் மிக மகிழ்ந்தனர். சுவாமி களின் அருளாசியைப் பெற்ற அவர்கள் சென்னை திருமபினர். அன்று முதல் அவ் வதிகாரி இம் மகானின் அருமைத் தொண்டர் ஆனார்.

## சைவன் பால் செய்த விநோதம்

ஒருதினம் சைவ பக்தன் ஒருவன் அரன் அடி யார்க்கு அன்னமிடுவது மிகப் புண்ணியம் எனக் கருதியவனாய், சுவாமிகளைப் பணிந்து

"மண்ணினிற் பிறந்தார் பெறும்பயன் மதிசூடும்,
அண்ணலா ரடியார் தமையமுது செய்வித்தல்"......,

என்பதைக் கூறி அமுது செய்ய வேண்டுமென்று அழைத்தனன். சுவாமிகள் அவனைச் சோதிக்க எண்ணி ஊன் உணவு கொண்டு வந்து அளிப்பா யாகில் உண்பேன்" என்றனர். அவனும் ஒருப் பட்டு இல்லஞ் சென்று மனைவி பால் விபரம் தெரி விக்க அவள் "நம் சைவ நெறிக்கு முரண்" என்ற னள். அதற்கு இச் சைவன் நாம் உண்ணுதற் கன்று பெரியோர் விருப்பப்படி அவருக்குச் செய்தளிப்பது; அதனால் நமக்கு இம்மை மறுமை

இரண்டிலும் இன்பம் உண்டாம். என்றிவ்வாறு பலவிதமாகக் கூறியதுடன், 'சிறுத தொண்ட நாயனர் பிள்ளைக்கறியமுது அளித்த பெருமையை அறிந்திருந்திருந்தும் மறுப்பது முறையாகா தெனக் கூறினன் 'கணவன் சொற்பிழையாமை கற்புடைமை'' என்னுங் கொள்கைப்படி அவளுஞ் சம்மதித்துச் சமைத்துக் கொடுத்தாள். அதை வாங்கிக் கொண்டு அவ் அன்பன் பெருமகிழ்ச்சி யோடு சுவாமிகளின் திருமுன்பு கொண்டு வந்து வைத்தலும், அதைக் கண்ட நமது சித்த புருஷர் எல்லா முணர்ந்த அருட் பெருக்கில் மூழ்கிய வராகலின்,

> ''பொருளாட்சி போற்றாதார்க் கில்லை யருளாட்சி
> யாங்கில்லை யூன்றின் பவர்க்கு.''

என்னுந் தமிழ் மறை அறியா மூடனே!? எனப் பலவிதமாக வைதும், எதிரில் நில்லாதே எனக் கூறிக் கல்லால் எறிந்துந் துரத்தினர். அச் சைவன் மிக வியப்புற்று சுவாமிகள் நம்மைச் சோதித்தற் பொருட்டு செய்த நீதிச் செயல் இது என்று எண்ணினன். ஸ்ரீ தோபா சுவாமிகளின் திருக்கண் பட்ட அப் புலால் உணவு எந்த எந்த உயிர்களா லானதோ அந்த அந்த பிராணிகளாய் உயிர் பெற்று நடந்தன. இதனைக் கண்ணுற்ற அனை வரும் பெருவியப் பெய்தினர். என்னே! என்னே!! என்று ஆர்ப்பரித்தனர். அச் சைவனும் உய்ந்தனன்.

## விடத்திற்கு விடையளித்த வித்தகர்

பிறகு, மேலக்குப்பம் என்னுங் கிராமத்தில் பதினோராண்டு நிறைந்த பெண் ஒருத்தி புளியம்

பாகம் ]

விதையுள்ள பாண்டம் ஒன்றில் கைவிட்டு எடுக்க அவ்விடத்திருந்த அரவு தீண்டி மாண்டனள்! பெற்ருேர்கள் வருத்த முற்றவர்களாய் அப்பெண்ணின் உடலை நமது சுவாமிகள் திருச் சந்நிதியிற் கிடத்தி, நிகழ்ந்ததைக் கூறிப் பணிந்து அழுத வண்ணமாய் உயிர் தர வேண்டினர். அன்ருெரு நாள் தமது குரு நாதரான ஸ்ரீ திருஞான சம்பந்தப் பெருமான் விட முண்டிறந்த வணிகனுக்கு உயிர் கொடுத்து அவன் மனைவியின் துக்கத்தைப் போக்கினதைப் போல்; சுவாமிகளும் திரு உள்ள மிரங்கி திருவருள் நோக்கஞ் செய்து அப்பெண்ணின் விடந் தீர்த்து உயிர் பெற்றெழுமாறு செய்து பெற்ருேர்களது துக்கத்தை நீக்கினர் இதனைக் கண்ணுற்ற, அம் மேலைக் குப்பம் என்னுங் கிராமத்தார் சுவாமிகளைக் குருவும் குலதெய்வமுமாகப் போற்றிப் புகழ்ந்து வருடாந்திர குரு பூசைக்குத் தம்மால் இயன்ற அளவு பொருளுதவியை இன்றளவும் பரமபரையாகச் செய்து வருகின்றனர்.

இந் நிகழ்ச்சியால் சீவன் முக்த மகானின் இரண்டாவது குணமான துக்கிகள் பால் காட்டுங் கருணை வெளிப்பட்டவாருயிற்று

## உலோப குணத்தை ஒட்டிய விந்தை

சுவாமிகள் கடை வீதியில் போய்க் கொண்டிருககும் போது திடீரென சோதிப்பான் வேண்டி ஒரு வணிகன் கடைக்குச் சென்று கற்கண்டு ஒன்றைக் கையில் எடுத்தார். உலோப குணம் மிக்க அக் கடையன் அதனைப் பிடுங்கி வைத்துக் கொண்டான். சுவாமிகள் மௌனமாய்த் திரும்பி வெளியே வந்தவுடன் அக் கடை காரணமின்றித்

தானுகவே இடிந்து விழுந்தது. ஈத்துவக்கும் இன்பம் அறியாத அவ் வன் கண் ணவன், மென் கண் ணவனுய் உலோப குணத்தால் வந்த கேடென உணர்ந்து ஸ்ரீ தோபா சுவாமிகளின் திருவடிகளில் வீழ்ந்து அழுது "சுவாமின் உலோப குணத்தால் கெட்டேன் அதனை இப்போது விட்டேன்" எனக் கூறித் தனக்கு அருளுமாறு வேண்டிஞன். சுவாமிகளும் இவன் திருந்தினமையைக் கண்டு இரக்கங் கொண்டு அருள் புரிந்தனர்.

## எண்ணெ அருவி உண்டாக்கிய எந்தை

மற்றொரு நாள் அடுத்த கடைத் தெருவில் உள்ள எண்ணெக் கடையில் கடைக்காரனிடம் 'சிறிது எண்ணெ கொடுப்பாயாக" என்றனர். கடைக்குள் குடங்களில் நிறைய எண்ணெ இருந்தும் எண்ணெ முழுவதும் விற்று விட்டதாக முழுப் பொய்யைக் கூறிஞன்! இதைக் கேட்ட சுவாமிகள் தணிக்கை அதிகாரி திடீரென உட்சென்று சோதனை யிடுவது போல் சென்று எண்ணெக் குடங்களைத் திறந்து மொண்டு மொண்டு தன் மீது ஊற்றிக் கொண்டார்கள். அந்த எண்ணெ: அருவி நீர் போல் பெருக் கெடுத்து வீதியில் ஓடியது!! வணிகன் ஒன்றும் கூற இயலாமற் றிகைத்தான். பிறகு, அவனும் அருகில் உள்ளவர்களும், 'சுவாமி, இப்படி எண்ணெயை வீணுக்கலாமா?, என்று வணக்கத்துடன் கேட்டனர். அதற்கு நமது மகான் கடைக்காரனைப் பார்த்து "உன் பொருள் உன்னிடமே பத்திரமா யுள்ளது" எனக் கூறி வெளியேறிஞர். உடனே அனைவர்களும் உள்ளே

பாகம் ]

சென்று பார்த்த போது எண்ணெக் குடங்கள் குறையாது முன் போலவே நிரம்பி இருந்தமை கண்டு வியந்து என்னே புதுமை! இப்படியும் நிகழுமோ !! இவருடைய தன்மை பெரும் புதிராக உள்ளதே!!! இம் மகானின் பெருமை மிக்க மகிமை தான் என்னே! என்னே !! என்பன முதலான பலப் பல வியக்கத் தக்க மொழிகளைக் கூறிய வண்ணஞ் சுவாமிகளின் திருவடிகளில் வீழ்ந்து வணங்கி அருள்பெற்றுச் சென்றனர்.

இதனுல் பொய்யுரையைக் கண்டித்த வாரு யிற்று.

## உதவி சிறியது பயன் பெரியது

ஒரு சமையம் இம் மகான் ஒரு தெருத் திண்ணை யில் அமர்ந்து கொண்டு அவ் வழியே தெருவில் தண்ணீர் எடுத்துக் கொண்டு வரும் பெண்களைக் கூப்பிட்டு ''என் தலையில் தண்ணீர் விடுங்கள் நான் குளிக்க வேண்டும்,'' எனப் பகர்ந்தார். உடனே அந்தப் பெண்களும் ஆளுக் கொவ்வொரு குடமாக அன்புடன் 'நன்னீராட்டு விழா' நடத்தி னர். சிறிது நேரங் கழிந்தபின் 'சரி போதும் போங்கடி'' எனவே அவர்களும் அவரவர் வீடு களுக்குப் போயினுர்கள். என்னே ஆச்சர்யம்! தாம் எடுத்துக் கொண்டு வந்தது இதுவே முதற் குடம் நீராயிருக்க அவரவர் வீட்டிலுள்ள எல்லாப் பாத்திரங்களிலும் நீர் நிரம்பி இருக்கக் கண்டு வியந்தனர். இவ் விநோதம் அந்த வேலூர் சைதாப்பேட்டை வட்டாரமே கண்டு வியப் புற்றது! என்னே சுவாமிகளது சித்துத் தன்மை !! இது,

"தினைத்துணை நன்றி செயினும் பனைத்துணையாக்
கொள்வர் பயன்தெரி வார்,"

என்று தமிழ்மறை கூறிய இலக்கணப்படி "பெரியோர்களுக்குச் செய்யுஞ் சிறிய உதவியும் பெரிய பயனை அளிக்கும்" என்பதை வெளிப் படுத்திக் காட்டியவாருயிற்று.

## மூன்று உருண்டை உணவு மூன்று விதமான விந்தை

"சட்டி கொடு" என்று ஒரு குயவன் வீட்டில் கேட்டு வாங்கிக் கொண்டு பிச்சைக்குப் போய் பல வீடுகளிலுங் கேட்கவே, அவ் வில்லக் கிழத்திகளும் தங்கள் தங்கள் வீடுகளில் செய்த பலகார பட்சணங்களைச் சட்டி நிறையப் போட்டார்கள். அங்கு ஒரு வீட்டுத் திண்ணையிலிருந்து கொண்டு சட்டியிலிருந்ததை நன்ருகப் பிசைந்து முதல் உருண்டையைத் தேவர்களுக் கென விண்ணில் வீசுவார். பிறகு தம்மைச் சூழ்ந்து கொண்டுள்ள நாய், பசு, கழுதை. காகம், குரங்கு முதலிய பிராணி களுக்கு இரண்டாவது உருண்டையைப் போடு வார். இந்த இரண்டில் விண்ணில் எறிந்ததோ மண்ணில் விழாது! மண்ணில் போட்டதோ பசுவுக்குப் பல்லாயும், காகத்திற்குச் சோருயும், நாய்க்கு எலும்பும் மாமிசமாயும், பூனைக்குப் பாலாயும், கிளிக்குக் கொய்யாப் பழமாயும், கழுதைக்குக் காகிதமாயும், குரங்குக்குப் பலவித கனிகளாயும், இவ்வாறு அந்த அந்த உயிர்களுக் கேற்ற உணவாக மாறிவிடும்! எஞ்சிய மூன்ருவது உருண்டை தாம் சாப்பிடுவதாகும்! இப்படியுஞ் செய்வதுண்டு இச் சித்த புருஷர்!?

பாகம் ]

## வெந்த சாதம்

மற்றொரு தினம் ஒரு வீட்டின் முன் சென்று "சின்னி சோறு கொண்டுவா" எனக் கேட்க, அவ்வில்லத் தரசி சுவாமிகளுக்கு அன்னமிடும் வாய்ப்பு கிட்டியதை நழுவ விட மனமில்லாதவளாய் அடுப்பில் சோறு வேகாதிருந்தும் அப்படியே அள்ளிக் கொண்டுவந்து அன்புடன் சட்டியில் போட்டாள். போட்டதும அந்தச் சாதம் வெந்திருக்கக் கண்டு உள்ளேபோய் அடுப்பில் வெந்து கொண்டிருக்கும் சட்டியைப் பார்க்க அதுவும் வெந்து மலர்ந்திருந்தது. என்ன இன்னும் நீண்ட நேரஞ் சென்ற பின் வேக வேண்டியிருக்க இப்பொழுதே வெந்து விட்டதே எனப் பெரு வியப்புற்றனள்.

அன்றொரு நாள் காலடியில் ஸ்ரீ ஆதிசங்கரர், தமக்கு ஒரு நெல்லிக் கனியை அன்புடன் பிச்சையிட்ட அந்த இல்லக் கிழத்திக்காகப் பொன் மழையைப் பொழியச் செய்தார். அதுபோன்று நமது ஸ்ரீ தோபா சுவாமிகளும் இம் மாதரசிக்கு ஏற்றம் பொருந்திய நல் வாழ்வைப் பெறத் திருவருள் பாலித்தாரெனக் கூறவும் வேண்டுங் கொல்!?

## வேகாத சாதம்

மற்றொரு வீட்டிற்குச் சென்று 'சின்னி சோறு கொண்டு வா' எனக் கேட்க, அவ் வீட்டரசி சாதம் வெந்திருந்தும் உலோப குணத்தால் 'சாதம் வேகவில்லை' என்றாள். சுவாமிகளும் 'சரி போடி சாதம் வேகாது' எனக் கூறிப் போய் விட்டார்கள் பிறகு வீட்டிற்குட் சென்று பார்க்க வெந்திருந்த சோறு வெகாததாகி விட்டது! அவள் அன்றைய தினம்

வெகுநேரந் தீயை எரித்தும் சாதம் வேகவே யில்லை!? இதனால் மிகுந்த கிலேசமுற்றாள். அதிலிருந்து அப் பெண்மணி தனதிடத்திருந்த உலோப குணத்தை விடுத்தாள்.

இவை, பிச்சை போடும் பெண்களிடத்துத் தமது அறக் கருணையையும்; தண்டித்து ஆட்கொள்ளும் மறக் கருணையுங் காட்டியவாறாயிற்று.

## இஷ்ட துஷ்டர்களிடத்து ஏக பாவனை

சிற்றுண்டிச் சாலையில் ஒரு சமயம் நமது தோபா மகானுக்கு ஆறு தோசைகளைக் கொடுத்தார்கள். புறக் கரணங்கள் ஐந்தும், அகக் கரணம் (மனம்) ஒன்றும் ஆக ஆறு புலன்களின் சேட்டைகளையும் மென்று தின்று அழித்துவிட வேண்டுமென்பதைக் காட்டுவது போல்; தமது திருக்கரத்தில் அவைகளை ஏந்திக் கொண்டு தின்று கொண்டே போனார்கள் இந்தத் தத்துவம அறியாத ஒரு முகம்மதியன் பார்த்து, துவேஷம் மிகுந்தவனாய் சுவாமிகளின் காதை அறுத்து விட்டான்! அதனால் ஒழுகிய இரத்தங், கரத்திலிருந்த தோசைகளை நனைத்தும் அறியாதவர்போல அருந்திக் கொண்டே போனார்கள் இதனைக் கண்ட அன்பர்கள், 'சுவாமியின் காதை யறுத்தவன் யார்?! என வினவினர். அதற்கு, "தோசை கொடுத்தவன் அறுத்தான்" என்றனர். "தோசை கொடுத்தது யார்? எனக் கேட்டார்கள், "காதை அறுத்தவன்" என்றனர். அதன் பிறகு காதைத் தடவினர்; பழையபடி காது இருக்கக் கண்டு அனைவரும் வியப்புற்றனர். அம் முகம்மதியன் அன்றிரவு வெளியூருக்குப் போனவன் திரும்பவே யில்லை!

பாகம் ]

இதனால், தேகம் நான் என்னுந் தேகாத்ம புத்தி சிறிதும் இன்றியவராய் "அகண்ட சிவமே நான்" என்னுஞ் 'சிவோகம்' பாவனையை அவதி பரியந்தம் (சந்தேக விபரீத மின்றிய முடிந்தநிலை) பெற்றவராய் விளங்கினமையோடு; இஷ்டனையும் துஷ்டனையும் சமமாகப் பாவிக்கும் ஏகபாவனையை வெளி யாக்கின வாருயிற்று

## தீது வருமுன் காத்த திருவிளையாடல்

ஒருபொழுது நமது மகிமை மிகு சித்த மகான் தமக்கு பிச்சை போட்ட பெண்மணியின் கையைப் பிடித்து இரத்தம் வரும்படி கிள்ளி விட்டுப் போய் விட்டார்! அன்று மாலை உத்தியோகம் பார்த்து வீடு திரும்பிய தன் கணவனான துரைமகனிடம் நடந்ததைக் கூறிக் கையைக் காட்டினாள். அவர், "சுவாமிகளின் செய்கை எதைப் பற்றியதோ ஒன்றும் புரியவில்லை" எனக் கூறித்திகைப்புற்றிருந்தார். சிறிது நேரத்தில் அந்தப் பெண்ணை அரவு தீண்டியது! அதைக் கண்ட துரையானவர் நமது சுவாமிகளைத் தேடி ஓடி வந்து திருவடிகளில் விழுந்து மனைவியைக் காத்தருள வேண்டினர். "அன்ப உன் மனைவியின் வலக்கையில் காயம் உண்டாக்கி யுள்ளேன் அதன் வழியாக விஷமிறங்கிச் சரியாகி விடும் போய்ப் பார்ப்பாயாக" எனத் திருவாய் மலர்ந்தருளினர் துரையும் விரைவாக வந்து பார்த்தார், அப்படியே நடந்துள்ளது! மனைவியும் மகிழ்ச்சி யுடனிருந்தாள். இதனைக் கண்ட துரையும் அவரது மனைவியும் வியப்புக் கடலில் மூழ்கியவராய்ச் சுவாமிகளின் தீது வருமுன் காக்குங் கருணையை எண்ணி உள்ளங் களிப்புற்றனர்.

## கண்ட யோகம் காட்டி அருளல்

சுவாமிகள் இரவில் தூங்கும்போது திருமேனி உறுப்புக்கள் தனித் தனியாக ஆக்கப்பட்டு துண்டந் துண்டமாகக் கிடப்பதைக் கண்ட அன்பர்கள் சிலர். விஷமிகளால் வெட்டப் பட்டிருக்கக் கூடும் என்றெண்ணி "அந்தோ! இனி இப்பெரியாரைப் போன்ற ஒருவரைப் பார்க்க முடியாதே என்னே துரதிஷ்டம்" எனப் பலவாருகப் பேசிக் கொண்டு வருத்த முடனிருந்தார்கள். ஆனுல், சுவாமிகள் காலையில் அவர்கட்கு முன் போலவே எழுந்து காட்சி கொடுத்தருளினர். இதனைக் கண்ட அந்த அன்பர்கள் நமது சித்த மகான் "கண்டயோக சித்தியிலும் மிக்க வல்லவர்" எனக் கூறி வியந்து சென்ருர்க்ள்.

## நரசிங்க தாசர் வரலாறு

சித்தூரில் வாழ்ந்த தனவான் ஒருவனுக்குப் புத்திரன் ஒருவன் இருந்தான். இவன் மந்த மதியுடையனுதலால் கல்விச் சாலைக்குப் போகாமல் மறைந்திருந்து, பள்ளிக்குச் சென்று வருபவன் போல் அந்த அந்த நேரங்களுக்குப் போய் உணவு அருந்திக் கொண்டு நடிப்பு செய்தவனு யிருந்தான். இஃதறிந்த பெற்றோர்கள் துன்புறுத்தி மீண்டும் பள்ளிக் கனுப்பினர். இனி வீட்டிற்குப் போனுல் திரும்பவுந் துன்பஞ் செய்து பள்ளிக் கனுப்புவர்; ஆதலால் வீட்டிற்குப் போகாமலே இருந்து விடுவோம். என்ற எண்ணங் கொண்டவனுய், சித்தூருக் கருகிலுள்ள மலைக் குகையில் ஒளிந்து கொண்டு உணவின்றி மூன்று நாட்கள் வரை

தங்கிவிட்டான். அப்போது 'வேமன்னர்' என்னும மகானுபாவர் அவ் வழியாய் வர, மலைக் குகையில் சிறுவன் தனித்திருப்பதைக் கண்டு உண்மை விசாரித்துக் கேட்டுத் தெரிந்து கொண்டு, அவன்பால் பெருங் கருணை யுற்றவராய் அச் சிறுவனை நாக்கு நீட்டும்படி செய்து, கலைமகள் பீஜ மந்திரத்தை எழுதிவிட்டு, "முன்னொரு நாள் ஆடு மேய்க்கும் இடையனு யிருந்த மடையன் பால் இரக்கங் கொண்டு காளிதேவி யானவள் அவன் நாவில் கலைமகள் பீஜ மந்திரத்தை எழுதி அருள் செய்ய; அன்று முதல் காளிதாசன் எனப் பெயர் பெற்று உலகெலாம் புகழ வாழ்ந்தான் போல; நீயும், வர கவியாய் திருமாலைப் போற்றி தெலுங்கு கீர்த்தனைகளைப் பாடுவாய் உன் பெயர் இனிமேல் நரசிங்க தாசர் என வழங்கப் பெறும்" என அருளிச் செய்து போயினர். இந் நரசிங்க தாசர் எண்ணிறந்த கீர்த்தனைகளையும், பாடல்களையும் இயற்றி நரசிங்க அவதாரஞ் செய்த திருமாலின் அருளைப் பெற்றவராய் தாய் தந்தையர்கள் களிக்கவும; உலகம் மதிக்கவும் படியான சிறப்பைப் பெற்று விளங்கினர்.

## நரசிங்கர் பரசங்கரைச் சரண் அடைதல்

இப்படி மந்திரம் அருளிய குருவான வேமன்னரின் அருளைப் பெற்று கவிராயரானோம்; இனி, விகித குருவின் அருளைப் பெற்று ஞான முற்று முத்தி யடைவோம். என எண்ணிய நரசிங்க தாசர் தெற்கு நோக்கி வந்தார். வேலூரில் எழுந்தருளியுள்ள ஸ்ரீ தோபா சுவாமிகளைப் பற்றி கேள்விப்பட்டு வந்து திருவடிகளில் வீழ்ந்து அட்

டாங்காதி நமஸ்காரங்களைச் செய்து, "என்னைப் பெற்ற தோபா சுவாமியே உபதேசம் ஆகாத காரணம் என்ன", என்னும் பொருள்படும் படியாக,

" ஸ்வாமி உபதேசிஞ் சவ்வதேமி நன்னு கன்ன
தோபா ஸ்வாமி உபதேசிஞ் சவ்வதேமி "

என்றற்றொடக்கத்துச் சில தெலுங்கு கீர்த்தனைகளை யியற்றி வழிபட்டுச் சுவாமிகளிடம் ஞானோபதேசம் வேண்டி நின்றார். சுவாமிகளும் கருணை கொண்டு தம்மிடம் இருக்கச் செய்து பக்குவம் வந்த பின் ஒருநாள் அவரைக் கை காட்டி விளித்து மன வாக்கிற் கெட்டாத பரம்பொருளை சின்முத்திரை காட்டி சனக, சனந்தன, சனாதன, சனத் குமாரர்களான நால்வருக்கு ஸ்ரீ தக்ஷிணா மூர்த்தி அருளியது போல் மௌனமாய் அருளினார்.

ஆள்காட்டி விரலைப் போன்ற சீவன்: ஆணவம், மாயை, கன்மம்; அல்லது ஆவரணம், விட்சேபம், மலம் என்னும் நடுவிரல், மோதிர விரல், சுண்டு விரல் என்ப மூன்றுடன் முறையே; அறியாமையினால் சேர்ந்திருப்பதை நீக்கி, பரம் பொருளாம் போன்ற கட்டை விரலோடு ஆள்காட்டி விரல் சேர்ந்திருப்பது போல்; குரு கிருபையால் ஞானம் பெற்று நிலைத்திருப்பதுவே, சின்முத்திரை விளக்கம் எனத் தெரிந்து, தெளிந்து, திடமுற்று ஞான நிட்டராய் அனுபூதியிற்றிகழ்ந்து விளங்குவாராயினர் நரசிங்க தாசர்.

இப்படிச் சிலகாலம் வேலூரில் இவர் வாழ்ந்த பின்னர், சலவன் துரை வசித்ததால் சலவன் பேட்டை என வழங்கு மிடத்தில் தமது ஜீவன் முத்தித் தசையை விடுத்து விதேக முத்தித்

பாகம் ]

தசையை அடைந்தார். அவ் விடத்தே சமாதி ஆலயம் அமைந்து நரசிங்க சுவாமி கோவில் என வழங்கப் பெற்று விளங்குவதுடன் குருபூசை முதலானவைகளும் இனிது நடந்தேறி வருகின்றன.

## சுவாமிகளின் ஒடுக்க நிலை

இவ்வாறு நமது தோபா சுவாமிகள் அனந்த சன்மங்களில் சற் குருவாய் உபாசித்த உபாசனு பலத்தினுல் தோன்ருக் குருவான, ஸ்ரீ திருஞான சம்பந்தப் பெருமான் அருள் பெற்றுத் திட ஞானமும்; நிஷ்காம கர்ம புண்ணிய, நிஷ்காம உபாசனு பரிபாகத்தால் விசாரித்துப் பெற்ற இத் திட ஞானம் போல்; அநேக முற் பிறப்புக்களில் செய்த காமிய கர்ம புண்ணிய, காமிய உபாசனு பரிபாகத்தினுல் அட்டமா சித்திகளும் பெற்றவராய், இது காறுஞ் சொல்லி வந்த தல்லாமல் இன்னும் அநேக திருவிளையாடல்களைப் புரிந்தும், தம்மைச் சரணடைந்த சீடர்களுக்கு முத்தியும், அன்புடன் வழிபாடியற்றிய பக்தர்களுக்கு இஷ்ட சித்திகளும், (சிஷ்ட பரிபாலனமும்) பாவிகளுக்கு நிக்கிரகமும் (தண்டித்து ஆட்கொள்ளுதலும்) இவர் தம் புனித முறு சரித மது கேட்கும் உதாசீனர்க்கு (நடு நிலையாளர்களுக்கு) புண்ணியச் செயலில் பற்றும், உண்டாகுமாறு வேலைமா நகரில் சுமார், பன்னிரண்டாண்டுகள் மகிமை மிக்க அருளாட்சியைச் செய்து கொண்டு துறவுச் சக்ரவர்த்தியாய் விளங்கி இருந்தார்கள்.

இப்படி இருக்க ஒருதினந் தமது தலைமை மாணுக்கரான சித்த நாத சுவாமிகள் முதலானவர்களை அழைத்து

தீதகற்ற வந்தருளுந் திருஞான சம்பந்தர்
நாதனெழில் வளர்சோதி நண்ணியத னுட்புகுவார்
போதநிலை முடிந்தவழிப் புக்கொன்றி யுடனுனர்.

என்று தமது குருநாதர் செய்ததுபோல் எல்லோரையும் அழைத்துப் போகத் திருவுளங் கொண்டு "அன்பர்களே! நான் போகின்றேன் நீங்களும் வருகின்றீர்களா?" என்று சில முறை திருவாய் மலர்ந்தருளினர். அதன் கருத்தை உணராதவர்களாய் அனைவர்களும் மௌனமாக இருந்தனர். இதனை அறிந்த சுவாமிகள், இவர்களுக்கு இன்னுங் காலம் வரவில்லை என்று உணர்ந்தவர்களாய், சித்தநாதரை நோக்கி "மகனே, யாம் இது காறும் இவ்வுடம்பிலிருந்து இவ்விட மியற்றியது போல்; இனிச் சிவலிங்கத் திருமேனியில் எம் மாற்றல் அனைத்தும் ஏற்றி (ஆரோகணித்து) ஒடுக்க நிலை எய்த உள்ளோம் இனிமேல் இச் சிவ லிங்கமே தோபா சுவாமியாகும்," எனப் பகர்ந்து முன்னர் சித்த நாத சுவாமிகளால் கட்டப்பெற்றிருந்த சமாதி அடக்கக் குகையுட் சென்று பத்மாசனத்தராய் அமர்ந்து

"வாக்கது மனத்திடை வைக்கும் அம்மனம்
போக்கிடும் புந்தியுட் புந்தி மானிலே
ஆக்கிடும் அந்தமான் இவையனைத் தையுந்
தாக்கறு சாந்தமாந் தன்னில் சாந்தமாம்,"

எனப் பிரம கீதையில் கூறிய வாறு ஒடுக்க நிலை பெற்றூர்கள். அப்போது விண்ணவத் தேவர் பூ மழை பொழிவது போல் குளிர்ந்த மழைத் தூரல்கள் சிந்தின.

பாகம் ]

இவ்வாறு தமதிச்சைப் படியே ஞான யோக வலியால் ஒடுக்கம் பெற்ற சுவாமிகளின் திரு மேனிக்கு ஆகம முறைப்படி சித்த நாதரும் மற்று முள்ள எண்ணிறந்த அன்பர்களும் திரண்டு வந்து வாத்தியங்கள் முழங்கவும், பஜனை யொலிகள் எழுப்பவும், எண்ணெய் பஞ்சாமிர்தம், பால், தயிர், இளநீர், பழச்சாறு, தேன், பன்னீர், சந்தனம், விபூதி முதலானவைகளால் அபிடேக மாட்டி, சோடச உபசாரங்களுடன் அருச்சனை செய்து தூபதீப நைவேத்திய முதலானவைகளால் பூசித்து அக் குகையை மூடி அதன் மீது,

" ஆதன மீதில் அரசு சிவலிங்கம்
போது மிரண்டினில் ஒன்றைத் தாபித்து,"

என்றவாறே சிவலிங்கப் பிரதிட்டையுஞ் செய்து தினந்தோறும் மூன்று காலம் பூசை நடத்தி வந்தும்; ஆகம விதிப்படி கருப்ப கிருக கோபுரமும் கட்டி அச் சமாதி நிலையக் கோவிலுக்குக் குட நீராட்டு விழாவினையுஞ் செய்து வைத்தனர்.

சாலிவாகன சகாப்தம் 1772-ஆம் வருடத் திற்கு (இங்கிலீஷ்) கி-பி-1850 சாதாரண வருஷம் பங்குனித் திங்கள் இருபத்தி ஏழாம் நாள் புதன் கிழமை பூர்வபட்சம் பிரதமை திதி இரேவதி நட்சத் திரம் கூடிய நன்னாளில் ஒடுக்க நிலை நின்றார் நமது மகிமை மிகு ஸ்ரீ தோபா மகான்.

[ இரண்டாம் பாகம் முற்றும் ]

உ
*சிவமயம்*

## மூன்ருவது பாகம்

இவ்வித மகிமை பொருந்திய நமது ஸ்ரீ தோபா சுவாமிகளின் சமாதி ஆலயத்திலேயே ஒருபக்கம தாம் இருக்கும் மடம் ஒன்றை ஏற்படுத்திக் கொண்டு சித்தநாத சுவாமியும் வாழ்ந்து வந்தார். தமது குருநாதருக்கு நித்திய நைமித்திகப் பூசை களை இயற்றியும் பக்தர்களுக்கு இஷ்ட சித்திகள் உண்டாகுமாறும் அனுக்கிரகித்துக் கொண்டி ருக்குங் காலத்தில் "முன்னர் சுவாமிகள் உள்ள போது மழைவளம் முதலான எல்லா நலங்களும் நிறைந்திருந்தன போன்றே இப்பொழுதும் வேலை மா நகரில் உள்ளன" என்று பக்தர்கள் கூறுவா ராயினர்.

## ஸ்ரீ மோட்டூர் சுவாமிகள்

"துன்பந் தோன்றில் எவருந் துறந்து ஏக ராய்த் தனித்தே, இன்பந் தேடல் இயற்கை" என் னும் நியதிப்படி மோட்டூரில் தோன்றிய ஒரு பெரியார் விரக்தியுற்று மூர்த்தி தலந் தீர்த்தமாடிக் கொண்டு காசிக்குச் செல்லும் வழியாக ஆற்காடு வந்து பாலாற்றில் ஸ்நானஞ் செய்து கரைஏறிச் செல்லுங்கால், அங்குள்ள குமாரசாமி என்னும் வயோதிகர் ஒரு புறந் திண்ணையில் இருந்து கொண்டிருந்தனர். அவ் விருத்தர் இம் மோட்டூர் சுவாமிகளைக் கண்டு ஞானநோக்கால் உணர்ந்து; "அன்ப, நீ காசிக்குச் சென்று கருமங்களைத் தொலைத்து மாசில் முத்தியடைவதை விட வேலை மா நகரில் சிவலிங்கத் திருமேனி கொண்டு எழுந்

தருளியிருக்கும் தோபா சுவாமிகளின் திருவடிகளுக்கு பணிசெய்து கொண்டு வருவையேல் "ஈசனும் ஞானி இருந்துள விடத்தே இருப்பது முத்தி" என்ற பிரம கீதையின் வாக்கியப்படி எளிதில் முத்தியுஞ் சித்தியுங் கிடைக்கும்" என்று அருளியதுடன் தாம் அருந்திக் கொண்டிருந்த மொச்சைக் கொட்டையில் ஒரு பிடியைப் பிரசாதமாகக் கொடுத்து தோபா சுவாமிகளின் திருக்கோவிலை அடையுமாறு அனுக்கிரகித்து அனுப்பினர்.

அதன்படியே வந்து வேலூரில் நமது சித்தநாத சுவாமிகளுக்குத் துணையாக இருந்து பணிபுரிந்து வருவாராயினர்.

சின்னாட்களுக்குப் பின் இச் சித்தநாத சுவாமிகளும், 1850-ஆம் ஆண்டு முதல் 1857-ஆம் ஆண்டு வரை அருளாட்சி செய்தபின், தமது சீவன் முத்தித் தசையை நீத்து விதேக முத்தித் நிலை பெற்றார். இவரது திரு மேனியை நமது ஸ்ரீ தோபா சுவாமிகளுக்கு எதிரில் முறைப்படி சமாதி அமைத்து நந்தி ரூபத்தைப் பிரதிட்டை செய்தனர். இவற்றை எல்லாம் முன்னின்று பணியாற்றிய இம் மோட்டூர் சுவாமிகள் நமது தோபா சுவாமிகளுக்குச் செய்யும் பூசையின் போது இந் நந்தி ரூபமாயிலகுஞ் சித்தநாத சுவாமிகளுக்கும் பூசை கைங்கரியங்கள் முதலியவைகளை மேற்கொண்டு, "என் கடன் பணி செய்து கிடப்பதே" என்று தமது வாழ்நாள் வரை நிஷ்காமியமாக (பலனை விரும்பா)ப் பணி செய்து கொண்டு ஆலயத்திற்குச் சில வருவாய்களைத் தேடி வைத்து விருத்தி செய்தவராய் முன்னர் குமார சுவாமிகள் வாக்கியப்படி முடிவில்

[ மூன்ருவது

உண்மை ஞானம் பெற்றிருந்து ஃ விடு எய்தினர். இவரது அருளாட்சி காலம் 1857-முதல் 1879-ஆம் ஆண்டு வரையாகும்.

இத் தோபா சுவாமிகளின் மடாலயத்திற்குச் சித்தநாத சுவாமிகள் முதலாவதும், இம் மோட்டூர் சுவாமிகள் இரண்டாவதும் ஆகத் தலைமை தாங்கி அருளாட்சி புரிந்தவர்கள் ஆவார்கள்.

## ஸ்ரீ தெய்வசிகாமணி சுவாமிகள்

அதன் பின்னர் சிதம்பரம் ஈசானிய மடம் இராமலிங்க சுவாமிகளின் மாணவரும், தேவாரத் திருமுறைகளையே நாடோறும் பாராயணஞ் செய்கின்றவரும், துறவற நெறியில் சிறிதும் வழுவாதவரும், சிவாலயங்கட்குச் சந்தனம் அரைத்துக் கொடுக்கும் பணியை மேற்கொண்டவரும், சிவனடியார்கள்பால் அளவிலாப் பற்றுடையவரும், அச்சிவனடியார்களுக்குத் தம்மால் இயன்ற உதவிகளைச் செய்வதில் பெரிதும் விருப்பமுடையவரும், மற்றும் பல நற்குணங்கள் அமையப் பெற்றவரு

ஃ வேலூரில் காகிதப் பட்டரைப் பகுதி ஆற்காடு ரோட்டில நமது தோபா சுவாமிகள் மடாலயத்திற்குச் சொந்தமான ஒரு நிலப் பகுதியில் ஷை மோட்டூர் சுவாமிகளின் திருமேனி அடக்கஞ் செய்யப்பட்டது. இதன் பிறகு தெய்வசிகாமணி சுவாமிகள், சுப்பிரமணிய சுவாமிகள ஆகியோர்களது திருமேனிகளும் அடக்கங்கள் செய்யபபட்டுள்ளன. அதன் பின்னர் சில காரணங்களால் வாழப்பந்தலார் வசம் ஷை நிலப் பகுதி சேர்ந்து விட்டது. இதனுல், ஷை சமாதிகளின் பராமரிப்பு நமது மடத்தின் பொருப்பில் இல்லாத காரணத்தால் மறைந்து விட்டன.

பாகம் ]

மாகிய தெய்வசிகாமணி என்னுந் திருநாமமுடைய பெரியார்: மேற்கூறிய மோட்டூர் சுவாமிகளின் ஆணையைப் பெற்று தோபா சுவாமிகள் திருக் கோவிலுக்குத் திருப்பணி செய்து கொண்டிருந்து அதைப் பரிபாலித்து வந்ததுடன் பூசை முதலிய வைகளையும் வழுவாது நடத்திக் கொண்டு வந்து ஸ்ரீ தோபா மகானின் திருவருட் பேற்றால் 1879ஆம் ஆண்டு முதல் 1904-ம் ஆண்டுவரை மூன்றாவது மடாதிபதியாக இருந்து அருளாட்சி புரிந்து வந்தார்.

தமது அந்திய காலத்தில் சுப்பிரமணிய சுவாமிகளை நான்காவது தலைமையைத் தாங்கு மாறு நியமனஞ் செய்த பின்னர், சிவஞானத்தைப் பெற்றவராய் முத்தி நிலையை எய்தினர்.

## ஸ்ரீ சுப்பிரமணிய சுவாமிகள்

சைவப் பற்றும், வியவகார குசலருமாய், ஸ்ரீ திருஞான சம்பந்தப் பெருமானைத் தோன்றாக் குரு வாகக் கொண்டவருமான இச் சுப்பிரமணிய சுவாமிகள், இராமநாதபுரம் மாவட்டம் காரைக் குடிக்கும், குன்றக் குடிக்கும் இடையிலுள்ள சமி வனச் க்ஷேத்திரமென்னுங் கோவிலூரில் அவதரித் தவர்கள். தோபா சுவாமிகளின் மடாலயத் தலைமைப் பொருப்பேற்றபின் முறைப்படி நித்திய நைமித்திகப் பூசைகளை நடத்தி வந்ததுடன் வருடந்தோறும் மிக விமரிசையாய் உலகம் புகழு மாறு குருபூசைகளையுஞ் செய்து கொண்டு வந்த னர். 1937-ஆம் ஆண்டில் தோபா சுவாமிகள் 'புராண வசனம்' என்னும் நூலை வெளியிட்டு ஸ்ரீ தோபா மகானின் பெருமையை யாவரும் அறியு மாறு செய்தனர்.

மற்றும் இக்கோவிலுக்கு மடைப்பள்ளி, விரிவான மடாலயம், மகா மண்டபம் முதலானவைகளை "முயற்சி திருவினையாக்கும்" என்றபடி, தமது முயற்சியினால் செய்து வைத்தனர். வேலை மா நகரில் இம் மகிமை மிகு தோபா சுவாமிகளின் சமாதி நிலையத் திருக் கோவில் ஒன்றே கண் போன்று சிறந்து விளங்குமாறு செய்தனர். இப்படிக் காண்போர்க்குப் பவநிக்கமும், நினைப்பார்க்கு இஷ்ட சித்திகளும், தொழுவார்க்கு உடற் பிணிகளைப் போக்குதலும், மற்றும் பாடிப் பரவுவார்க்குப் பல நலங்களும் எனப் பலவாறாய் வேண்டுவார்க்கு வேண்டிய வாறே பயன்களை அளித்தலுமாய் நமது தோபா சுவாமிகளின் ஆலயம் விளங்கிக் கொண்டிருந்தது.

## புதிய பாண லிங்கப் பிரதிட்டை

இவ் வாறிருக்கும் நாளில் வட தேசத்திலிருந்து இரண்டு துறவிகள் இராமேஸ்வர யாத்திரை செல்லுவான் வேண்டி தென் திசையை நோக்கி வருங்கால்; இடையில் இவ் வேலை மா நகர் பாலாற்றங் கரையிலுள்ள ஒரு சத்திரத்தில் தங்கி இருந்தனர். அவ் விருவரும் இரவில் நிட்டையிலிருக்குங்கால் நமது சித்த மகான் காட்சி கொடுத்து மறைந்தனர். மறுநாட் காலையில் இவ் விரு துறவியரும் தாங் கண்ட பால வடிவ சித்தர் இவ் வூரில் எங்குளார்? என விசாரித்தவராய் சைதாப் பேட்டையிலுள்ள நமது தோபா சுவாமிகளின் மடாலயத்திற்கு வந்து தலைவரான சுப்பிரமணிய சுவாமிகளைக் கண்டு நிகழ்ந்தவற்றைக் கூறினர். பிறகு, ஷை சுவாமிகளால் தோபா

பாகம்]

மகானின் பெருமைகளை நன்கு தெரிந்து கொண்டு வணங்கி, சுவாமிகளின் கருப்ப கிருகத்தைத் தமது கையால் அளந்து கணக் கெடுத்துக் கொண்டு தென் திசை யாத்திரைகளை முடித்துக் கொண்டு மீண்டுங் காசிமா நகரை அடைந்தனர். அங்கு சிற்ப நூல் முறைப்படியே பொருத்தமான ஒரு பாண லிங்கத்தைத் தேடி எடுத்து இங்கு அனுப்பி வைத்தனர். அதை அன்போடேற்று பிரதிட்டை செய்து கோவிலையும் புதுப்பித்து மிகச் சிறப்பாக மகா கும்பாபிஷேகம் செய்து வைத்தார்கள சுப்பிர மணிய சுவாமிகள். அது முதற்கொண்டு அக் கோவிலின்கண் தோபா சுவாமிகளின் திருவருள் முன்னைவிட மிக அதிகம் உண்டாகி உலகிற்கு இனிது அனுக்கிரகம் அளித்து வருகின்றது.

## சித்தி கொடுத்த தோபா சித்தர்

இப்படி இருக்குங்கால் ஓர் அன்பர் வந்து தோபா சுவாமிகளின் திருக் கோவிலை அடைந்து சுவாமிகளை வணங்கித் துதித்து "எனக்குச் சித்தியை அளித்தாலன்றி இக் கையை மடக்க மாட்டேன் சித்தி பெற்றதற் கடையாளமாக இக் கையில் ஒரு வளையலும் போட வேண்டும்" எனச் சபதம் கூறி ஒரு கையை உயர்த்தினர். அக் கையை இறக்காமல் மூன்று நாட்கள் வரைக் கும் இப்படியே கடுந்தவம செய்தார். நான்காம் நாள் அவ் அன்பர் விரும்பியவாறே நமது தோபா சித்த மகான் அருள்பாலித்தார். அதைப் பெற்ற அவர் பல சித்திகளைக் காட்டி நல முற்றவராய் உலகம் போற்ற வாழ்ந்து வந்தார்.

## கண் பார்வை கொடுத்த கருணை தோபா

மற்றுங், கோவணாண்டியாய், பழநி கோவணாண்டி (முருக) பக்தராய், சட்டியைத் தலையில் கவிழ்த் துள்ளவராய், சட்டிச் சாமி எனப் பெயர் பெற்றவராயு முள்ள ஒரு பெரியார், தமது கண்களில் மாசு படர்ந்து பார்வை மங்கிப் போனதை நீக்குவான் வேண்டி வேலூரை அடைந்து நமது தோபா சுவாமிகளை வணங்கி 'தோபா' 'தோபா' எனக் கூறி அலறி அழுது "எனக்குக் கண்களைக் கொடுப்பாயாக, இல்லையேல் இம் மண்ணுக்கிரையாய் உன் திருமுன் உயிர் விடுவேன் இது திண்ணம்," எனக் கூறிக் கடுந் தவம் புரிந்தனர். இதனைக் கண்ட தோபா சுவாமிகள் இவர் கனவில் தோன்றி "அன்ப உனக்குக் கண்களைக் கொடுத்தோம் வருந்தற்க," எனக் கூறினர். உடனே விழித்துப் பார்க்க பழநி சட்டிச் சாமிக்குப் பார்வை இனிது உண்டாயிற்று. மகிழ்சிப் பெருக்கால் வணங்கிச் சென்ருர்.

இந்தப் பிரகாரம் ஸ்ரீ தோபா சுவாமிகளின் சமாதி நிலையத்தை அநேகம் பேர்கள் வழிபட்டு நன்மை அடைந்து வரும் நாளில் சுப்பிரமணிய சுவாமிகள் 1904-ம் ஆண்டு முதல் 1947-ம் ஆண்டு வரை அருளாட்சி நடத்தித் தமக்குப் பிறகு தம்முடனிருந்த 'சின்ன' சுப்பிரமணிய சுவாமிகள்பால் மடாலயப் பொருப்புக்களைக் கொடுத்து விட்டு இறைவன் திருவடி நீழல் பெற்றனர்.

## ஸ்ரீ சின்ன சுப்பிரமணிய சுவாமிகள்

திருநெல்வேலி மாவட்டம் பாபநாசத்தில் தோன்றியவராய் அடக்கம் முதலிய நற்குணங்கள்

பாகம் ]

நிரம்பிய ஐந்தாவது மடாதிபதியாகிய 'சின்ன' சுப்பிரமண்ய சுவாமிகள் 1947-ஆம் ஆண்டு முதல் அருளாட்சியை ஏற்று நடத்திய காலத்தில் முன்னர் நடந்தவைகளைக் குறைவற நடக்குமாறு நிர்வகித்ததும்,

*"ஈதல் இசைபட வாழ்தல் அதுவல்ல*
*தூதியம் இல்லை உயிர்க்கு,"*

என்னுந் தமிழ் மறைப்படி வாழ்ந்து காட்டி பல்லோரும் போற்றும் படியாகவும் நடந்தும், சிற்சில திருப்பணிகள் செய்தும், மடாலயத்தைச் சிறப்புற வைத்துக் கொண்டிருந்தார்கள். ஆறுவது மடாதிபதியாக வடிவேல் சுவாமிகளை நியமனஞ் செய்து விட்டு 14-2-1965-ஆம் ஆண்டு இறைவன் திருவடியை அடைந்தார்கள். இவரது திருமேனியை மடத்திற்குச் சொந்தமானதும் எதிரில் உள்ளதுமான பூந்தோட்டத்தில் அடக்கஞ் செய்யப் பட்டுள்ளது.

## ஸ்ரீ வடிவேல் சுவாமிகள்

இராமநாதபுரம் மாவட்டம் காரைக்குடி கோவிலூர் மடத்தில் எட்டாவது குருமூர்த்திகளாக எழுந்தருளியிருந்த, ஸ்ரீ ல ஸ்ரீ சோமசுந்தர ஞானதேசிக சுவாமிகளின் சீடர்களில் ஒருவரான இவர்கள், சித்தூர் மாவட்டம் நகரி புதுப்பேட்டையில் அவதரித்தார்கள். சிதம்பரம் ஸ்ரீ பொன்னம்பல சுவாமிகள் மடத்திலும், எறும்பூர் ஸ்ரீ தத்துவராய சுவாமிகள் மடத்திலும் பன்னாள் பணியாற்றிய வேதாந்த விற்பன்னர். இவர்களும் 1965-ஆம

[மூன்ருவது

ஆண்டு முதல் தலைமைப் பொறுப்பேற்றி நடத்துங்கால், ஸ்ரீ தோபா சுவாமிகளின் திருக்கோவில் பூசைகளையும், மடாலயத்தின் நிர்வாகத்தையும், சிறப்பான முறையில் இயற்றினர்கள், 29 3-1968-ஆம் தேதியில் "தோபா சுவாமிகள் சரித்திரச் சுருக்கம்" என்னும் நூலை வெளியீடு செய்தனர். பிறகு, ஏழாவது மடாதிபதியாக மகா நாராயண சுவாமிகளை நியமனஞ் செய்து விட்டு 25-5-1969 ஆம் நாளில் சிவலோகம் அடைந்தார்கள். இவரது திருமேனியையும் ஸ்ரீ 'சின்ன' சுப்பிரமணிய சுவாமிகளின் சமாதிக் கருகிலேயே அடக்கஞ் செய்யப்பட்டுள்ளது. வருடந்தோறும் இவ்விரு சமாதிகளுக்கும் குரு பூசைகள் சிறப்பாக நடைபெற்று வருகின்றன.

## ஸ்ரீ நாராயண சுவாமிகள்

சேலம் மாவட்டத்தைச் சேர்ந்த இராசிபுரத்தில் தோன்றிய இவர்கள், இராமநாதபுரம் மாவட்டம் காரைக்குடி கோவிலூர் மடம் ஏழாவது குருமகா சந்நிதானம ஸ்ரீலஸ்ரீ மகாதேவ ஞானதேசிக சுவாமிகளிடம் 1940-ஆம் ஆண்டில், முற்பிறப்புக்களில் செய்த நிஷ்காம புண்ணிய பரிபாக வசத்தால் வாழ்க்கையில் வெறுப்புற்றவராய் வந்து அடைக்கலம் புகுந்து, சீடராகி வேதாந்த பாடங்களைக் கிரமமாகக் கற்றுணர்ந்தார்கள். அக் காலத்தில் ஷெ மடாலயத்தில் சுமார் அறுபது சாதுக்களுக்கு மேல் தங்கி இருந்து கொண்டு ஆத்ம விசாரஞ் செய்யுஞ் சாதகர்களாக இருந்தனர். அவர்களில் தாமும் ஒருவராக ஸ்ரீ குருமூர்த்தியின் பேரருள் பெற்றவராய் விளங்கினர். ஷெ குருமூர்த்தியின்

பாகம்]

விதேக முத்திக்கடுத்த (1948-ஆம்) ஆண்டில் அக் கோவிலூர் மடத்தின் கிளை மடமான மானுமதுரை மடத்தில் சிலகாலங் தங்கி யிருந்தனர். அப் பொழுது, நற்குண நற்செய்கைகளின் சிகரமாய் விளங்குபவரும், கோவிலூர் மடத்தின் 'இரண்டாம் பாடத்துச் சுவாமி' என்றன்புடன் அழைக்கும்உப குருவுமான, ஸ்ரீ சிவப்பிரகாச சுவாமிகளிடம் சந்நி யாச தீட்சை பெற்று அம் மானுமதுரை மடத்தின் மூலவரான ஸ்ரீ நாராயண சுவாமிகளின் அருட் பெயரைத் தமது தீட்சா ∴ நாமமா (பெயரா)கப் பெற்றனர்.

பின்னர், இந் நாராயண சுவாமிகள் 1950-ஆம் ஆண்டில் வடதேச யாத்திரையைத் துவக்கினார் கள். காசி, பிரயாகை, அயோத்தி, முதலிய க்ஷேத் திரங்களைத் தரிசித்து ஹரித்துவார் சென்று பன்னிரண்டாண்டுகளுக் கொருமுறை நடைபெறு வதான சாதுக்கள் கும்பமேளாவில் கலந்து கொண் டிருந்து விட்டு, அங்கிருந்து இரிஷிகேஷஞ் சென்று சுவாமி ஸ்ரீ சிவானந்த யதீந்திர மகானைத் தரி சித்து அவரது அருளைப் பெற்றவராய், இமாலயத் திலுள்ள கேதாரநாத். பத்ரிநாத் ஆகிய சிவ, விஷ்ணுச் சேத்திரங்களுக்குக் கால்நடை யாத்தி ரையை மேற்கொண்டு முடித்தனர். இந்தப் பிரகா ரம் சுமார் நான்கு மாத காலமாக வடதேச, இமாலய யாத்திரையை முடித்துக் கொண்டு மற்றும் பல இடங்களைத் தரிசித்தவராய்த் தெற்கே வந்து இராமேஸ்வரம், திருச்செந்தூர், கன்னியாகுமரி, மலையாளப் பகுதிகள் முதலானவைகளில் மூர்த்தி தல தீர்த்தங்களை முறையாகச் செய்து முடித்தனர்.

---

∴ பிள்ளைத் திருநாமம் ஆறுமுகம்

"தவமுந் தவமுடையார்க் காகும் அவம்அதனை
அஃதிலார் மேற்கொள் வது,"

என்ற தமிழ் மறைப்படி துறவிகளுக்குச் சுதர்ம மான தவத்தை மதுரைக்கு மேற்கே யுள்ள தேவா ரத்தில் தங்கி இரண்டாண்டு காலம் இயற்றினர். அதன் பிறகு கால்நடையாகவே வடதிசை வந்து வடாற்காடு மாவட்டம் பழைய வாணியம்பாடி பொன்னம்பல சுவாமிகள் மடத்தில் மடாதிபதி மகா கோவிந்த சுவாமிகளுடன் சில காலந் தங்கி இருந்தனர்.

பின்னர், வேலூருக்கு வடமேற்கே பாலாற் றின் வடபுரமுள்ள திருமணி கிராமத்தை அடைந் தார். அவ்விடமுள்ள அன்பர்கள்,

"துறந்தார்க்கும் துவ்வா தவர்க்கும் இறந்தார்க்கும்
இல்வாழ்வான் என்பான் துணை"

என்று திருவள்ளுவனர் வகுத்த இல்லற நெறியில் நின்றவர்களாதலால் நமது சுவாமிகளுக்குப் பேரா தரவு காட்டினர். அதன் காரணமாகத் தனித்து இருந்து மனத்தை ஒடுக்கும் (தனுமானசி என்னும் ஞான பூமிகளில் மூன்றும்) சாதனைகளைச் சுமார் ஏழு ஆண்டுகள் செய்தவராய் நிவிர்த்தியாக அவ் வூரிலேயே தங்கி வசித்தனர்.

அதன் பிறகு, கலசபாக்கத்திற்கு மேற்கே உள்ள பூண்டி மடத்தின் தலைமையை 1961-ஆம் ஆண்டில் ஏற்று, அப் பூண்டியில் எழுந்தருளி

யிருந்த ∵ ஸ்ரீ பூண்டி மகான் ஆற்றுச் சுவாமிகளின் பேரருள் பெற்றவராய் சுமார் எட்டு ஆண்டுகள் வாழ்ந்தனர். அவ்வமயம் பிராயமபட்டு, பூண்டி, பழங்கோவில் ஆகிய ஊர்களில் உள்ள அன்பர்களுக்கு கோவிலூர் சம்பிரதாய வேதாந்த பாடங்களை நடத்திக் கொண்டிருந்தனர்.

பின்னர், 25-5-1969-ஆம் ஆண்டு ஸ்ரீ தோபா சுவாமிகள் மடத்தின் ஏழாவது மடாதிபதியாகப் பொறுப்பேற்றுக் கொண்டனர். தமக்கு முன்னிருந்த வடிவேல் சுவாமிகளுக்குப் பத்தாங் கிரியை, முதலாண்டு குருபூசை ஆகியவைகளைச் சிறப்பாகச் செய்து, கோவிலூர் பரம்பரை முதலான சாதுக்களை வரவழைத்து அன்ன வஸ்திர தானங்களைச் செய்ததோடு அவரவர் கட்கான வழிச் செலவுகளையுங் கொடுத்தனுப்பினர். மற்றும் ஒவ்வொரு வருடமும் நடைபெறும் நமது தோபா மகான் குருபூசைகளை முன்னிலும் நல்ல முறையில் சொற்பொழிவுகள் பஜனை முதலான நிகழ்ச்சிகளோடு நடத்திக் கொண்டும், நித்திய நைமித்திகப் பூசைகளையும முறையாக நடத்தி வருகின்றதோடு, அவ்வப்போது பக்தர்களின் விருப்பப்படி பெரிய புராணம முதலிய பக்தி மார்க்கப் பனுவல்களையும், நா நா ஜீவ வாதக் கட்டளை முதலான கோவிலூர் வேதாந்த சமபிரதாய ஞான நூல்களையும் பாடங்களாக நடத்திக் கொண்டிருக்கின்றனர்.

---

∵ இப் பூண்டி மகான் காளயுக்திஸூ ஐப்பசிமீ 17-ம்உ (5-11-1978) வெள்ளிக்கிழமை அனுச நட்சத்திரத்தில் விதேகமுத்தி அடைந்தார்.

[ மூன்ருவது

## இஷ்ட சித்தி பெற்ற அர்த்தஞரி

சேலம் மாவட்டத்திலுள்ள இராசிபுரத்தைச் சேர்ந்த பழனி செட்டியார் மகன் அர்த்தஞரி B.Sc என்பவர், நமது ஸ்ரீ தோபா சுவாமிகள் மடததிற்கு வந்து மடாதிபதி ஸ்ரீ மகா நாராயண சுவாமி அவர்கள் அருளாசியைப் பெற்றுத் தங்கி மடத்துக் கைங்கரியங்களைப் புரிந்தவராய் வேலூர் காட்பாடி ஆசிரியர் பயிற்சிக் கல்லூரியில் சேர்ந்து படித்து B.T. பட்டம் பெற்ருர். பட்டம் பெற்ற அடுத்த வாரமே 1971-ம் ஆண்டு ஜூன் மாதத்தில் குடியாத்தம் நகராட்சி உயர்நிலைப் பள்ளியில் ஆசிரியர் பணியை ஏற்ருர். சில மாதங்களுக்குப் பின் தமது மாவட்டத்திலுள்ள வீரகனூர் அரசினர் உயர்நிலைப் பள்ளியில் வேலை கிடைத்தது. இவ் வண்ணம் ஆசிரியர் தொழில் புரிந்து கொண்டிருக்குங்கால், கோவை பேரூர் சாந்தலிங்க அடிகளார் தமிழ்க் கல்லூரியில் படித்துத் தமிழ்ப் புலவராகித் தற்போது இராசிபுரத்தில் தமிழாசிரியைப் பணியை மேற்கொண்டு புரிந்துவரும், ஞானும்பிகை என்னும் நற்குண நன் மங்கையைத் திருமணஞ் செய்து கொண்டார். இப்பொழுது கணேஷ் குமார், கார்த்திகேயன் என்ற இரண்டு ஆண் பிள்ளைகளுக்குத் தந்தையாக விளங்குகிருர்.

1970-ஆம் ஆண்டு நமது ஸ்ரீ தோபா சுவாமிகளைக் சரணம் அடைந்த அவர்; தமது இஷ்ட சித்திகளை நிறைவேற்றி குடும்ப வாழ்க்கையை விளக்கஞ் செய்த ஸ்ரீ தோபா சுவாமிகளுக்கு அபிஷேக ஆராதனைகளைச் செய்வித்து, அணையா விளக்கு ஒன்றை வாங்கிக் கொடுத்து, சுவாமி

பாகம் ]

களின் ஆலய கருப்ப கிருகத்தில் இரவு பகல் தீபம் எரிவதற்காக மாதந்தோறும் இந் நாள்வரையும் ரூபாய் 10–00 அனுப்புபவராய் இவரும் உள்ளார்.

## வராத கடன் வந்த விதம்

இப்படி உள்ள காலத்து ஒருநாள், ஏகாம்பர குப்பம் கோ. அ. துரைசாமி முதலியார் என்னும் அன்பர் ஒருவர் ஸ்ரீ தோபா சுவாமிகளின் சந்நிதானத்திற்கு வந்து மிகவுந் துக்கமுடையவராய், "சென்னை வண்ணாரப்பேட்டை சண்முகராயன் தெருவிலுள்ள கோட்டை வெங்கட சுப்பாராவிடமிருந்து, தமக்கு வரவேண்டிய கடன் ரூபாய் பதினைந்தாயிரத்தை இழக்கும் நிலையில் உள்ளதே அதை வரும்படி செய்தருளல் வேண்டும்," என உருக்கமாகப் பிரார்த்தித்துக் கொண்டு அன்றிரவு மடத்திலேயே படுத்து உறங்கினார்.

அவரது கனவில் நமது சுவாமிகள் தோன்றி "அன்ப உனக்கு வரவேண்டிய ரூபாயில் இரண்டாயிரம் உன் மனைவியிடம் கொடுக்கும்படி செய்துள்ளோம்; பிறகு முழுவதும்வரும் வருந்தற்க," எனக் கூறி மறைந்தருளினர். இவர் கனவினின்று நீங்கி ஆச்சர்ய முற்றவராய்த் தமது ஊருக்குச் சென்று விசாரிக்க, அப்படியே நடந்திருப்பதைக் கண்டு வியப்பும் மகிழ்வும் அடைந்தவராய் இருந்தார். சின்னாட்களுக்குப் பின் எஞ்சிய தொகையும் வரப் பெற்றார். இவ் விபரங்களை வேலூர் வந்து நமது மடாலயத் தலைவரிடம் கூறி, ஸ்ரீ தோபா சுவாமிகளுக்கு அபிஷேக ஆராதனைகளைச் செய்வித்து, அவர்தம் மகிமைகளை வியந்து வணங்கிச் சென்றார்.

## தீராத நோய் தீர்ந்த விதம்

மற்ருெரு நாள் செய்யாற்றின் தென்பாலுள்ள பழங் கோவில் என்னும் ஊரைச் சேர்ந்த A. சுப்பிரமணியம், B.A., அவர்கள் வேலூர் C.M.C. ஆஸ்பத்திரியில் தங்கிப் பல நாட்கள் வைத்தியம் செய்தும் நலமாகாத தனது மனைவியை அழைத்துக் கொண்டு தம்முடைய ஊருக்குச் செல்லும் போது, ஸ்ரீ தோபா சுவாமிகளைத் தரிசித்துப் போக வந்தார்கள். அந்த அம்மாள், சுவாமியை மிகவும் மனமுருகப் பிரார்த்தித்து வணங்கினள். என்ன ஆச்சர்யம்! சிறிது நேரத்தில் நடக்கக் கூட முடியாது இருந்த நிலைபோய் நடக்கும் படியாகவும், விரைவில் உடம்பின் கண் இருந்த வியாதியும் போய் ஆரோக்கிய நிலையையும் பெற்றனள். இந் நிலையினைத் தனது கணவனுருக்குச் சொல்ல அவரும் மகிழ்ந்து மடாலயத் தலைவர் ஸ்ரீநாராயண சுவாமிகளிடம் கூறித் தோபா சுவாமிகளின் மகிமையைப் போற்றிப் புகழ்ந்து, அபிஷேக ஆராதனைகளைச் செய்வித்து மகிழ்ந்தார். தோபா சுவாமிகளின் மகிமை தான் என்னே! என்னே!!

## களவை நீக்கிய கருணை

இன்னு மொரு தினம் நமது மடத்திற்குச் சிதம்பரத்திலிருந்து திரு. நா. சோ. மாணிக்க முதலியாரும் அவரது நண்பருமாக இரண்டு அன்பர்கள் வந்தார்கள். அவர்கள், தாம் மடத்தில் சாப்பிட்ட சாப்பாட்டிற்காக அரிசியை வாங்கிக் கொடுத்து விட்டு, "தோபா சுவாமிகளின் மடத்தின் சாப்பாட்டிற்காக அரிசியைக் கொடுக்கா

விட்டால் நம்முடைய நெல் மூட்டைகள் களவு போகும்" என்று ஒருவருக் கொருவர் பேசிக் கொண்டு தமது ஊருக்குப் போயினர்.

அரிசியை மடத்திற்குக் கொடுக்கும் நிகழ்ச்சி யானது வேலூரில் எப்போது நடந்ததோ அதே நேரத்தில் ஷெ யார்களின் ஊரான சிதம்பரத்தில் இவர்களுக்குச் சொந்தமான நெல் மூட்டைகள் களவு போயின! ஆயினும், உடன் கண்டுபிடிக்கப் பட்டுக் கைப்பற்றப் பட்டது என்ற இந் நிகழ்வு களை அறிந்த இவர்கள், நமது ஸ்ரீ தோபா சுவாமி களின் அருளால் தான் கண்டுபிடிக்கப் பட்டதென உணர்ந்தவர்களாய் வேலூருக்கு வந்து நமது மடாதிபதி சுவாமிகளிடம் விபரமாகக் கூறினர். வியப்பும் மகிழ்வு முற்ற திரு. நா. சோ. மாணிக்க முதலியார் அவர்கள் நடைபெற இருந்த திருப்பணி யில் கருப்ப கிருக கோபுரம் முதலிய பழுது பார்க் கும் திருப்பணிச் செலவுகளுக்குப் பெருந் தொகையை நன்கொடையாகக் கொடுத்து உத வினர்.

இப்படி அநேக விதமாக வியக்கத் தக்க மகிமை வாய்ந்த அற்புத நிகழ்ச்சிகள் இன்றள விலும் ஸ்ரீ தோபா மகான் அருளால் நடந்த வண் ணமாகவே உள்ளன.

*"செயற்கரிய செய்வர் பெரியர் சிறியர்*
*செயற்கரிய செய்கலா தார்,"*

என்ற திருக்குறளின் இலக்கணத்திற்கு இலக்கிய மாகத் திகழ்ந்து விளங்கும் பெரியரான மகிமை மிகு இம்மகான் திருக் கோவில் பழுது பட்டிருக்

[மூன்றுவது

கவே, அதனைப் பழுது பார்க்கும் திருப்பணியை மேற்கொண்டு நமது மடாதிபதி சுவாமிகள், அநேக பக்தர்களின் பொருளுதவியைக் கொண்டு பிரகாரத்திலுள்ள ஓலைக் கூரையை அகற்றி 'சிமிண்ட் சீட்' போட்டது முதலான பழுதுகளைப் பார்த்து, திருப்பணி இயற்றி, அழகான இராஜ கோபுரமும், ஸ்ரீ தக்ஷிணா மூர்த்தி பீடமும் அதில் நமது தோபா சுவாமிகளின் திரு உருவப் பிரதிட்டையும் புதியதாக ஸ்தாபிதஞ் செய்து கற்ப கிருக கோபுரத்திற்கும் பழுது பார்த்து வர்ணங்கள் வைத்து அழகு படுத்தியும், (21-3-1977-ஆம் தேதியில்) நமது சுவாமிகளின் 127-ஆவது வருட குரு பூசையின்போது, புனருத்தாரண அஷ்ட பந்தன மகா கும்பாபிஷேகமும் விமரிசையாக நடத்தினர். அவ் வமயம் திருமுருக அருள் மொழி அரசு ஸ்ரீ கிருபானந்தவாரியார் சுவாமிகள் அவர்களும், கோவிலூர் பரம்பரை சாதுக்களும், பல பெரியோர்களும், அன்பர்களும், பக்தர்களும் கலந்து கொண்டு மிகச் சிறப்பித்தனர். இதில் கலந்து கொண்ட சாதுக்களுக்கும், இயாக சாலையை நடத்திய வைதீகர்களுக்கும், அன்ன, வஸ்திர, காணிக்கைகளும், வழிச் செலவுத் தொகையையும் கொடுக்கப் பட்டன. இதன் நினைவாக "ஸ்ரீ தோபா சுவாமிகள் வரலாறு" நூலும் வெளியிடப்பட்டது.

இப்படிச் சிறப்புற நடத்திக் கொண்டு வரும் நமது தோபா சுவாமிகளின் மடாதிபதியாகிய, மகா. நாராயணசுவாமி அவர்களுக்கு கலியுகம் 5080 ஹ காளயுக்தி ஆண்டு தைமீ 10-ம் நாள் (23-1-1979) அனுஷ நட்சத்திரம் அன்று அறுபது ஆண்டுகள் முடிவுபெற்றன. அதன் நினைவாக

பாகம்]

பஞ்ச பூதங்களில் நடுவான அக்னி பூத ஸ்தலமாய் "நினைக்க முத்தியருளும்" திருவண்ணாமலைக்குப் பல அன்பர்களுடன் சென்று ஸ்ரீ அண்ணாமலையார், ஸ்ரீ உண்ணாமுலை அம்மனுக்குமாக அபிஷேக ஆராதனைகளை நடத்தியும், அன்றைய தினம் சாதுக்களுக்கும், ஏழைகளுக்கும், 'அப்பர் இல்லம்' அனாதை மாணவர்களுக்கும் அன்னதானஞ் செய்தார்கள். தமது செலவில் அச்சிடப்பட்ட 'கீதா சாரத் தாலாட்டு' என்னும் ஞான நூலை இலவசமாக வெளியிட்டார்கள்.

இதுபோல; சித்தார்த்தி௵ தைமீ 27-ம்-உ (10—1—1980) அன்று தமது அறுபத்தோராவது ஆண்டு நிறைவின் நினைவாக பஞ்ச, பூதஸ்தலங்களில் முதலாவதாம் பிருதிவி ஸ்தலமான காஞ்சிபுரஞ் சென்று ஸ்ரீ ஏகாம்பர நாதருக்கும், ஸ்ரீ காமாட்சி அம்பிகைக்கும் அபிஷேக ஆராதனைகளைச் செய்வித்து, அன்று காஞ்சிபுர ஸ்ரீநாராயண சேவா ஆஸ்ரமத்தில் அன்னதானம் செய்தார்கள். சாதுக்களும், ஏழைகளும், பிரமுகர்களும் கலந்து உண்டு சிறப்பித்தனர். இதனை ஒட்டி வேலூர் "குருடர் இல்லம்" அனாதைகளுக்கும் 17-1-1980-ம் நாள் அன்னதானஞ் செய்யப்பட்டது.

இப்படியே. இரௌத்திரி௵ தைமீ 17-ஆம் தேதி (30-1-1981) வெள்ளிக்கிழமை அன்று, தமது அறுபத்திரண்டாவது ஆண்டு நிறைவின் நினைவாக; பஞ்ச பூதஸ்தலங்களில் நான்காவதாம் வாயுஸ்தலமும், சிலந்தி, காளம் (பாம்பு) அத்தி (யானை) ஆகிய மூன்றும் பூசித்து முத்தி பெற்றதால்; சீகாளத்தி எனச் சிறப்புப் பெயர் பெற்றது

[மூன்றுவது

மான சீகாளத்தி ஸ்தலத்திற்குச் சென்று சீகாளத்தி நாதருக்கும், ஞானம்பிகைக்கும் அபிஷேக ஆராதனைகளைச் செய்வித்து, அன்று ஸ்ரீ ஓங்காரஸ்வாமி மடத்தில் அன்னதானம் செய்தார்கள். சாதுக்களும், ஏழைகளும், பிரமுகர்களும் அருந்தி ஆனந்தம் பெற்றனர்.

இன்னும், பஞ்ச பூத ஸ்தலங்களில், அப்பு பூத ஸ்தலமான திருவானைக் காவலிலும், ஆகாய பூத ஸ்தலமான சிதம்பரத்திலும் அடுத்த இரண்டாண்டுகளில், முறையே மேற்கண்டவாறே செய்ய விரும்பியுள்ளார்கள். இறைவன் திருவருளால் நிறைவேறுவதாகுக.

130-ஆண்டுகளாகியும் நமது மகானுக்கு உற்சவமூர்த்தி இல்லையே என்று பக்தர்கள் குறைபட்டுக் கொண்டார்கள். அதனை நிறைவேற்ற வேண்டி பல அன்பர்களின் பொருளுதவியைக் கொண்டு, ஸ்ரீ தோபா சுவாமிகளின் திரு உருவ உற்சவ மூர்த்தியைப் பஞ்ச லோகத்தால் செய்யப் பெற்று, கலியுகம் 5081-ஆம் ஷை சித்தார்த்தி ஆண்டு ஐப்பசிமீ 9-ம் தேதி (26—10—1979) அன்று கும்பாபிஷேகம் சிறப்பாக நடைபெற்றது. இதில் அருள் மொழியரசு ஸ்ரீ கிருபானந்தவாரியார் சுவாமிகளின் சிறப்புச் சொற்பொழிவும் நடை பெற்றது. அன்றிரவு ஷை மூர்த்தியின் திருவீதி உலாவும், பியாண்டு வாத்திய முழக்கத்துடன்

பாகம்]

நடைபெற்றது. ∴ ஷெ திருப்பணிக்கு நன்கொடை அளித்தவர்களின் பெயர்களை கல்வெட்டில் பதிப்பிக்கப் பட்டிருக்கின்றன. இதனால், ஸ்ரீ தோபா சுவாமிகளிடம் முன்னைவிட அதிகமான பக்தி இவ் வேலூர் மக்களுக்கு ஏற்பட்டுள்ளது.

மேலும் நமது ஸ்ரீ மகா–நாராண சுவாமிகள்

"தினைத்துணை நன்றி செயினும் பனைத்துணையாக்
கொள்வர் பயன்தெரி வார்,"

"எந்நன்றி கொன்றார்க்கும் உய்வுண்டாம் உய்வில்லை
செய்ந்நன்றி கொன்ற மகற்கு,"

என்ற திருக்குறள்களின்படி, சிறிய உதவிகளாயினும் அவற்றின் பயன்களை உணர்ந்தவராய்ப் பெரியதாகவே கருதி நன்றிமறவாத் தன்மையுடையவராய்த் தம்மாலியன்ற உதவிகளை, அன்னார்களுக்குச் சமயம் வாய்க்கும் போதெல்லாம் செய்த வண்ணமாகவே யுள்ள பண்புகளை உடையவராய் உள்ளார்கள். இவர்களின் அருளாட்சியில் பல விதமான சிறப்புக்கள் ஸ்ரீ தோபா மகானுக்கு நடந்த வண்ணமாகவே உள்ளன.

இவைகளன்றி சுமார் ஐம்பதாண்டுகளுக்கு முன்பு வேலூர் மகந்து ஐஸ்கூல் (இக்காலம் ஸ்ரீ வெங்கடேஸ்வரா மேல்நிலைப்பள்ளி) தலைமைத்

---

∴ இப்படிப் போல 18–3—1980-ஆம் தேதியில் நடைபெற்ற 130-ஆவது ஆண்டு குரு பூசையில் முதன் முதலாக திருவீதி உலா நடத்தப்பட்டது. இனித் தொடர்ந்து ஆண்டு தோறும் ஸ்ரீ தோபா சுவாமிகள் எழுந்தருளல் செய்து இல்லங்கள் தோறும் சென்று அருள் பாலிப்பார்கள்.

தமிழ்ப் பண்டிதர் (1946-ல் ஓய்வுபெற்ற) திருவாளர் வீரபத்திரப் பிள்ளை அவர்கள் "ஸ்ரீ தோபா சுவாமிகளின் ஞான நாயக மாலை," என்று நூறு பாடல்களையும், "மகான் ஸ்ரீ தோபா சுவாமிகளின் அருட்பத்து" எனப் பதிஞெரு பாடல்களையும் பாடியுள்ளார்கள். அவற்றில் முன்னதில் ஒரு பாட்டு வருமாறு:—

"கண்ணிஞல் நின்றன் திருவுருக் கண்டார்
காதிஞல் நின்புகழ் கேட்டார்,
எண்ணிஞல் நின்றன் நாமஞ்சிந் தித்தார்
இருகரம் உச்சிமேற் குவித்தார்,
மண்ணின்மேற் புரிந்த வல்வினை யோட்டி
வான்கதி சேர்வர் ஈதுண்மை.
தண்ணிலா முடியோய் சைதைவாழ் தோபாச்
சாமியே ஞான நாயகனே."

பின்னதில் ஒருபாட்டு வருமாறு:—

"ஓதிடா துணர்ந்த வொருசிறு மகவின்
உண்மையை யுணர்ந்தருள் உலகச்,
சாதிபே தத்தைத் தகைந்திடு தலைவ
சமரிடு பற்பல சமய,
வாதிமார் உணர வத்துவே அகத்தில்
வளர்ந்தெழு சின்மய வடிவச்,
சோதியே தோபா சுவாமிநின் னடியே
துணையெனக் கருள் தருவாயே."

எனவும் ஆகும்.

இன்னும், போளூர் தாலுக்கா இண்டேரிப் பட்டி (கோவிலூர் பரம்பரை) கணித நூற்புலவர்

பாகம்]

திரு. அருணாசல நயினார் அவர்களால் இயற்றப் பெற்ற ஸ்ரீ தோபாசாமி தோத்திரப் பா" வில் இரண்டு பாக்கள் வருமாறு:—

"மாதவனே வேலூர் மகிதலத்தில் வாழ்வோனே
பூதலமெ லாம்நிறைந்த பூரணமே பாதமலர்
வந்தடைந்த நாயினுக்கு வன்பிறவி நோய்தீர்ப்பாய்
எந்தைதோ பாசாமி யே." எனவும்

∴ "சீரநதி சூழ்ந்திலகுந் திருராய
வேலூரு சிறந்து வாழ்க,
பூரணமாய் நிருவிகற்பம் பொருந்தியதோ
பாசாமி புகழும் வாழ்க,
நேரெனவோங் கிடுங்கோவில் திருத்தொண்டு
செயவமைந்த செல்வர் வாழ்க,
பாரினிற்செந் தமிழ்வாழ்க படித்தோர்க்
கேட்டோரும் பல்யுகம் வாழ்கவே." எனவும் ஆகும்.

இப்படி அட்டமா சித்திகளும் தத்துவ ஞானமும் பெற்று அவதூதராய் (நிர்வாணியாய்)ச் சென்னையிலும். வேலூரிலும் வாழ்ந்து மக்களுக்குத்; தந்தையின் கருணையைப் போல் சிட்டரைக் குளிர்ந்தும் துட்டரைக் காய்ந்தும் நல்வழிப் படுத்திய கருணா மூர்த்தியான நமது ஸ்ரீ தோபா சுவாமிகளின் சரித்திரத்தை நாள்தோறும் படித்தும், நண்பர்களைப் படிக்கச் செய்தும், பூசித்தும், சிரத்தை (நம்பிக்கை) யுடன் வழிபட்டு அன்னார் அருளைப் பெறுவார்களாக.

---

∴ பாலாறு, சீரம் = பால்

இத்தகைய மகான்களை, சசிவண்ண போதத்தில், "ஞானியை நரன்சுரன் எனுதொழிக ஞாலமுய நாதனருளால்,மேனியது கொண்டுதனை நல்கவரும் என்றையும் வேதமுடிவே."

எனக் கூறியிருப்பது மன்றி

" ஈசனும் ஞானி யிருந்துள விடத்தே
யிருப்பது முத்திதான் அந்தத்
தேசிகன் ஏவல் செய்பவன் கால்என்
சென்னியில் இருப்பதும் அன்றி
மாசிலாப் பரம ஞானியாம் முனிக்கு
மகேசனும் ஒப்பலன் மதிக்கில்
ஆசிலா அரியும் ஒப்பலன் ஃ நானும்
ஒப்பலன் ஏவர்ஒப் பாரே "

என்று பிரம்ம கீதையிலும் கூறியுள்ளார்; வேதத்தை அருளிய வேதா எனப்படும் அன்ன வாகனனும் அயன்.

"ஸ்ரீ தோபா சுவாமிகள் அற்புத வரலாறு"

முற்றும்.






ஃ பிரம தேவனுகிய நானும்.

